திருப்பதி காங்கிரஸ் மாநாடு - ஸ்பெஷல் ரிப்போர்ட்....

# கல்கி

KALKI 26.4.92 ரூ. 3.00
பொன்விழா ஆண்டு

## தஞ்சை நகரச் சிறப்பிதழ்







THE GINSENG HEALTH

# உங்களால் முடியும்!



பகிர்ந்து வாழ்வதில் ஏற்பட்ட மகிழ்ச்சி, ஒன்று கூடி இன்பமாகக் கழிந்த நாட்கள் இவையெல்லாம் நினைவிருக்கிறதா? ஆம், அந்நாட்களில் உள்ளம் நாடியதற்கேற்ப உடல் ஒத்துழைத்தது.

அந்நாட்களைத் திரும்பப் பெற வேண்டுமா? உபயோகியுங்கள் **வினோஃபிட்** ஜின்செங்*

**வினோஃபிட்**-ல் கொரியாவின் ஜின்செங் மற்றும் இன்றியமையாத மூலிகைச் சாறுகள் சேர்ந்துள்ளதால் உடலின் இரத்த ஓட்டம், ஜீரண சக்தி மற்றும் இன்றியமையாத உறுப்புகளின் செயலாற்றம் மேம்படுத்தப்படுகிறது. மேலும், சோர்வு குறைந்து உடலில் சக்தி அதிகரிக்கிறது.

இதைத்தவிர, **வினோஃபிட்** சருமத்தை எழிலடையச் செய்து, நோய்களை எதிர்க்கும் திறனை உடலிற்கு அளித்து மூளையின் செயலாற்றலை அதிகரிக்கிறது.



(பெரிய அச்செழுத்துக்களில் எழுதவும்)

பெயர் ..............................

முகவரி ..............................

..............................

நகரம் .............................. பின் ..........

**வினோஃபிட்**
**ஜின்செங்**

வொக்ஹார்ட் வழங்கும் தரமான தயாரிப்பு

## வாழ்வில் துடிப்புணர்வுடன் வாழ.

TRITON 91 WL 174 TI

# இந்துக் கோயிலுக்கு முஸ்லீம் தலைவர்!



☛ கோயில் குருக்களோடு தாஜுதீன்

இந்து - முஸ்லீம் ஒற்றுமைக்கு ஓர் உதாரணம், தஞ்சையிலுள்ள பழைய வீட்டு வசதி வாரியக் குடியிருப்பு என்று அடித்துச் சொல்லலாம். இங்குள்ள பாலவிநாயகர் ஆலயம் மற்றும் விஷ்ணு துர்க்கை ஆலயக் கமிட்டியின் தலைவராக இருப்பவர் மு. தாஜுதீன்.

ஒரு முஸ்லீம் எப்படி இந்துக் கோயில் கமிட்டியின் தலைவராக இருக்கிறார்? ''இந்தக் கோயில்கள் இங்கு உருவாகக் காரணமே அவர்தான்!'' என்கிறார்கள் அங்கு குடியிருப்பவர்கள்.

''நான் இங்குள்ள குடியிருப்போர் சங்கத் தலைவராகவும் இருக்கிறேன். இங்குள்ள பெண்கள், அருகிலுள்ள யாகப்பா நகரிலிருக்கும் கோயிலுக்குத்தான் முன்பு சென்று வந்து கொண்டிருந்தார்கள். மாலை வேளைகளிலேயே அவர்கள் கோயிலுக்குச் சென்று வருவார்கள் என்பதால், சில காலிகள் அவர்களைக் கேலி செய்வது வாடிக்கையாகி விட்டது. இதை அவர்கள் சங்கத் தலைவர் என்ற முறையில் என்னிடம் வந்து புகாராகச் சொன்னார்கள்.

''நான் யோசிக்க ஆரம்பித்தேன். இங்கேயே ஒரு கோயில் கட்டி விட்டால், இவர்களுக்கு வசதியாக இருக்குமென்று தோன்றியது. எனது யோசனையை மற்ற உறுப்பினர்களிடம் கூறிய போது, அவர்களும் ஒப்புக் கொண்டார்கள்.

''உடனே வசூலுக்குக் கிளம்பினோம். எங்களது எண்ணத்தை அப்போதைய எம். எல். ஏ. உபயதுல்லாவிடம் சொன்ன போது, அவர் மூவாயிரம் ரூபாய் கொடுத்துக் கோயில் கட்டும் பணியைத் துவங்கச் சொன்னார். ஒரு முஸ்லீமான நானே கோயில் கட்ட நன்கொடை கேட்டுப் புறப்பட்டதால், அனைவரும் தாராளமாகவே நன்கொடை வழங்க ஆரம்பித்தார்கள்.

''பிறகென்ன... பாலவிநாயகர் ஆலயத்தோடு, விஷ்ணு துர்க்கை ஆலயத்தையும் சேர்த்தே கட்டி விட்டோம். என்னையே கோயில் கமிட்டித் தலைவராகவும் இருக்கச் சொன்னார்கள். அதன்படியே இருக்கிறேன்!'' என்றார் தாஜுதீன்.

''ஒரு முஸ்லீமான உங்களுக்கு, இந்துக் கோயில் கமிட்டித் தலைவராக இருப்பதில் ஏதும் ஒரு வேற்றுமை உணர்வு ஏற்படவில்லையா?''

''எந்த மதமும் வேற்றுமை உணர்வைப் போதிக்கவில்லையே! மதம் என்பதெல்லாம் மனித உறவுகளை மேலும் மேலும் பலப்படுத்துவதற்கும் உறுதிப்படுத்துவதற்கும் ஏற்பட்டவைதானே தவிர, மனிதர்களுக்குள் பிளவுகளை உண்டாக்குவதற்கு அல்ல!'' என்றார் தாஜுதீன்.

– நிருபர்கள்

☛ கமிட்டி உறுப்பினர்களுடன்...



# நேரு குடும்பம் இல்லாமல் காங்கிரஸ் மாநாடு!

மண்டையைப் பிளக்கும் கடுமையான வெயில். நரசிம்மராவின் அறுபதடி உயர கட்-அவுட் நிழலில் ஒதுங்கி நின்று கொண்டிருந்தார், ஸ்ரீகாகுளத்தைச் சேர்ந்த காங்கிரஸ் தொண்டர் லட்சுமண ரெட்டி. தனியார் நிறுவனத்தில் வேலை செய்யும் இவர், தம் கைப் பணத்தைச் செலவு செய்து கொண்டு திருப்பதி காங்கிரஸ் மாநாட்டுக்கு வந்திருக்கிறார். ''நரசிம்மராவ் என்று நாம் ஆரம்பித்த உடனேயே, ''எப்படிப் பட்ட தலைவர். குழப்பமான நிலையில் இருந்த நாட்டைத் தெளிவான சிந்தனைக்கு மாற்றியிருப்பவர் அவர். அவர் கரங்களைப் பலப்படுத்துவது நம் எல்லோருடைய கடமை'' என்று சொல்லிப் பூரிக்கிறார்!

லட்சுமண ரெட்டி போன்றே ஆயிரக் கணக்கான காங்கிரஸ் தொண்டர்களும் பிரமுகர்களும் திருப்பதியை அடுத்து அமைக்கப்பட்ட ராஜீவ் நகரில் குழுமி னார்கள். முதல் நாள் மாநாடு துவக்கத்துக்கு ராவ் மேடைக்கு வந்தபோதே எழுப்பப் பட்ட கோஷம் : 'ராஜீவ் காந்தி அமர் ரஹே'. மூன்று நாள் மாநாட்டிலும் கோஷம் தொடர்ந்தது. என்றாலும் நேரு குடும்ப நிழலிலிருந்து காங்கிரஸ் விடுபடவும், பிரதமர் நரசிம்மராவ் வித்தியாசமானதொரு தனிப் பெரும் தலைவராகத் தம்மைப் பலப்படுத்திக் கொள்ளவும் இந்த மாநாடு உதவியது என்பதில் சந்தேகமே இடையாது.

''ஏதோ பா. ஜ. க. வுடன் ராவ் ரகசிய உறவு வைத்திருக்கிறார் என்று எதிர்க்கட்சிகள் மட்டுமல்ல, எங்கள் கட்சியிலேயே சிலர் சொல்லி வந்தார்கள். அதனால் பா. ஜ. க. வைக் கடுமையாக எதிர்க்கும் அர்ஜுன் சிங்கை விட்டே அரசியல் தீர்மானம் தயார் பண்ணச் சொன்னார் ராவ். அந்தக் கட்சி

☛ விஜயவாடாவிலிருந்து வந்த ஒரு தொண்டர்...




☛ பலத்த பாதுகாப்புடன் நடமாடிய காங்கிரஸ் பிரமுகர்கள்



யைப் பற்றிக் கடுமையாக விமர்சனம் செய்து தயாரிக்கப்பட்டிருந்த தீர்மானத்தை ராவ் ஓ. கே. செய்தது பலருக்கு வியப்பாக இருந்



திருக்கலாம்'' என்றார் காங்கிரஸ் பிரமுகர் ஒருவர்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்களுக்குப் பலர் போட்டியிட விரும்புவது தெரிந்தும் 'கருத்தொற்றுமை' என்ற போர்வையில் யாரையும் நியமிக்காமல் பத்துக் காலியிடங்களுக்குத் தேர்தல் வைத்ததன் மூலம், தாம் வித்தியாசமான ஜனநாயகப் பற்றுள்ள தலைவர் என்பதை மீண்டும் நிரூபித்தார் ராவ். தேர்தல் நடக்கும் என்று அறிவித்த போது சல சலப்புகள் உண்டாயிற்று. தவறு செய்யும் ஒரு மாணவனைக் கண்டிப்பும், அன்பும்

☛ சாப்பாட்டு அரங்கத்தில் கனிக்குத்.



ஒருங்கே வெளிப்படுத்தித் திருத்தும் ஆசிரியரைப் போன்று, அந்தச் சந்தர்ப்பங்களில் செயல்பட்டார் ராவ்.

''தேர்தல் முடிவுகளின்படி நரசிம்மராவுக்கு எ தி ர் கோ ஷ் டி என்று கருதப்படுகிற அர்ஜுன் சிங், சரத்பவார் போன்றோரும் காங்கிரஸ் காரியக் கமிட்டியில் சக்தி வாய்ந்த இடங்களைப் பெறுகிறார்கள். எல்லாரையும் அனுசரித்து, அணைத்துப் போகத் தம்மால் முடியும் என்ற துணிவில்தானே தேர்தலை நடத்தியிருக்கிறார் ராவ்'' என்று வியந்து போற்றினார் அவருடைய தீவிர ஆதரவாளர் ஒருவர்.

நேரு குடும்பம் கலந்து கொள்ளாத காங்கிரஸ் மாநாடு இது. இந்த மாநாட்டை மே மாதம் 21-ம் தேதிக்குள் நடத்தியதில் நேரு பரம்பரையின் தலைமையே நீடிக்க வேண்டும் என விரும்பும் சில காங்கிரஸ்காரர்களுக்கு வருத்தம்தான். ''ஒரு வருடம் வெளியில் எங்கேயும் வர மாட்டேன் என்று சொல்லியிருந்தார், சோனியாஜி. அது தெரிந்தும் அவசரமாக மாநாட்டை நடத்துவானேன்?'' என்று கேட்ட ஒருவர், ''சோனியா அரசியலுக்கு வருவது தவிர்க்க முடியாதது. அப்போது காங்கிரஸில் சில அற்புதங்கள் நிகழும்'' என்றார்.

''இந்த நிலையில் மாநாட்டின் நிகர லாபம் என்னவாக இருக்கும்?'' என்று நம் பாராளுமன்ற உறுப்பினர் அன்பரசுவைக் கேட்ட போது, ''கொஞ்சமும் சந்தேகம் வேண்டாம். பிரதமர் மேலும் பலம் பெற்றுத் திகழ்வார்'' என்றார் அவர்.

''மண்டல் - மஸ்ஜித் என்று நாடு முழுவதும் இருந்த கலவரச் சூழலை மாற்றி, பொ ரு ளா தா ர விஷயங்களை நாட்டின் முக்கிய பிரச்னையாக்கியது ஒன்றே ராவ் அவர்களுக்குப் பெரும் வெற்றி. அவரது அனுபவமும் அறிவும் நாட்டை நல்ல நிலைக்குக் கொண்டு செல்ல முடியும்'' என்றார் வி. என். காட்கில்.

''பதவியைத் தக்க வைத்துக் கொள்ள அரசியல் பம்மாத்துகள் செய்ய வேண்டும் என்ற அவசியம் நரசிம்மராவுக்கு இல்லை. அதுவே அ வ ரு டை ய வெற்றிக்குக் காரணம். கவர்ச்சி இல்லாத தலைவர் என்று சொல்கிறார்கள். தனிப்பட்ட ஒருவரின் கவர்ச்சி சர்வாதிகாரத்துக்குத்தான் வழி

## காணாமல் போன 'ஐ'!



● அங்கேயும் தமிழக காங்கிரஸ் பிரமுகர்கள் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்து நின்று கொண்டிருந்தார்கள். ''கட்சித் தலைமை தமிழ்நாட்டில் கட்சித் தேர்தல் நடத்த முற்படாததைப் பற்றி ஒரு சின்ன பிரஸ் கான்ஃபரன்ஸை மேடைக்குப் பின்னாலேயே நடத்தினார் வாழப்பாடி.

● இந்த மாநாட்டில் 'ஐ' மிஸ்ஸிங். எப்படி என்கிறீர்களா? மேடையிலும், பல இடங்களிலும் 'இந்திய தேசிய காங்கிரஸ்' என்றுதான் குறிப்பிட்டிருந்தார்களே தவிர பிராக்கெட்டில் 'ஐ' இல்லை.

● மாநாட்டு மேடையில் பளிச்சென்த் தெரிந்த விஷயம், பல தலைவர்கள் காந்தி குல்லாய் அணியாமல் இருந்ததுதான்!

● மாநாட்டில் கலந்து கொள்ள வந்திருந்த வெளிநாட்டுப் பிரமுகர்களுக்குப் பரிசுகள் கொடுக்கப்பட்டன. அப்போது அருகிலிருந்த பத்திரிகையாளர், ''இருவரை விட்டு விட்டார்களே...!'' என்று வருத்தத்துடன் சொன்னார். எல்லோரும் அவரைக் கேள்விக் குறியுடன் பார்க்க, ''உலக வங்கி, சர்வதேச நிதி நிறுவனம் ஆகியவற்றைச் சேர்ந்தவர்களுக்கு எங்கே பரிசு?'' என்றாரே பார்க்கலாம். சிரிப்பலை பரவியது.

● மாநாட்டுக்குப் பந்தக்கால் போட்டதிலிருந்து எல்லா ஏற்பாடுகளிலும் மூப்பனாரின் பங்கு உண்டு என்று சொல்லத் தேவையில்லை. ஆயினும் மாநாடு நடக்கும் போது மேடைக்குக் கூட வராமல், வழக்கம் போல பின்னாலேயே நின்று கொண்டு ஜோக்கடித்துக் கொண்டிருந்தார் அவர்.

● பிரதமர் மூன்று தினங்களிலும் குறித்த நேரப்படி டாணென்று மேடையில் வந்தார். ஆனால் காங்கிரஸ்காரர்கள் வராததால், அரங்கம் காலியாக இருந்தது. ''நேரந் தவறாமையைக் கடைப்பிடிக்க வேண்டும்'' என்று பிரதமர் அறிவுரை சொல்ல நேர்ந்தது.

● காங்கிரஸ்காரர்களில் பலர் HIT LIST ல் இருப்பதால் கறுப்புப் பூனை, சாம்பல் பூனை என்று பல பூனைகளின் பாதுகாப்போடு உலவிக் கொண்டிருந்தார்கள் பிரமுகர்கள். ஆந்திர பிரமுகர்கள் சிலர் தனிப்பட்ட பாதுகாப்பாளர்கள் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள், லுங்கி உடுத்திக் கொண்டு, கட்டைத் துப்பாக்கிகளைப் பிடித்துக் கொண்டு உலவி வந்ததைப் பார்க்க தமாஷாக இருந்தது.

வருக்கும். அதற்கு மாற்றாகக் காங்கிரஸார் எல்லோரும் சேர்ந்து அவருக்கு ஆதரவு கொடுப்பதன் மூலம் கட்சி பலப்படும்! இதுதான் திருப்பதி மாநாடு வெளியிடும் செய்தி. இதை நாம் சரியாகப் புரிந்து கொள்ளாமல் தவறிழைப்போமானால் நாடு நம்மை மன்னிக்காது'' என்றார் உத்தர பிரதேச காங்கிரஸ் தலைவர் ஒருவர்.

- ப்ரியன்

படங்கள் : ராஜன்

# தாய்மை அடையும் பருவத்திலே உங்கள் இருவருக்காக 'உண்ண' வேண்டுமே!

## உங்களுக்குத் தேவை அதிக ஊட்டச்சத்துள்ள

## புதிய காம்ப்ளான்® விட்டாமில்க்®

உங்களுக்குள் இன்னொரு புதிய உயிர், உங்கள் குழந்தை வளர்ந்து கொண்டிருக்கிறது. இந்த முக்கிய நேரத்தில் உங்கள் ஆரோக்கியத்திற்கும், சிசுவின் வளர்ச்சிக்கும் போதுமான கூடுதல் ஊட்டச்சத்துக்கள் தேவை.

காம்ப்ளான்—விட்டாமில்க் உங்களுக்கும், பிறக்கப்போகும் உங்கள் குழந்தைக்கும், தேவையான ஊட்டச்சத்துக்களையும் மற்றும் காம்ப்ளானின் எல்லா நற்பயன்களையும் கொண்டது. இதில் ஃபோலிக் ஆஸிட், பால் புரதம் (22.2 கிராம்), வைட்டமின்கள் A, $B_6$ மற்றும் C, இரும்புச் சத்து, அயோடின், கால்ஷியம், ஸிங்க் மற்றும் மக்னீஷியம், தேவையான அளவில் அடங்கியுள்ளது.




தினமும் 2 கப்புகள்

ரெகுலர் * சாக்லேட்

உடல் நலத்தின் உறைவிடம் க்ளாக்ஸோ

GL/V/P/91/R-TAM



நட. ராஜன்

# தஞ்சையை மிஞ்சும் கலைத்திறன் எது?

சிவகங்கைப் பூங்கா வாசலில், சில தொழிலாளர்கள் மரங்களைக் கோடாரியால் வெட்டிக் கொண்டிருந்தார்கள். விறகுக்கா?

''இல்லீங்க. வீணைக்கு. இது பலா மரங்க. பெரிய பெரிய மரங்களை அறுத்து, வெட்டிக் குடைந்து ஆரம்ப வேலைங்களைக் கோடாலியால, நாங்கதாங்க செஞ்சு கொடுக்கிறோம். அப்புறந்தாங்க கையால பக்குவமா எழைச்சு எழைச்சு வீணை செய்யறவங்க, வீணையாக்குவாங்க...!'' என்றார்கள்.

''வீணையின் அடிப்பாகம், தண்டுப்பாகம், குடம் என்று தனித் தனியாகச் செய்துதான் ஒன்றாகப் பொருத்தி வீணையாக்குகிறோம். முழு வீணையையும் ஒரே மரத்திலும் செய்யலாம். அப்படிச் செய்தால் மூன்று வீணைகளுக்குச் செல

திருநாவுக்கரசு



அருணாசலம் பத்தர்



வாகும் மரம் அந்த ஒரு வீணைக்கே செலவாகும். அந்த வீணைக்கு 'ஏகாண்டம்' என்று பெயர். மற்ற வீணைகளின் விலை சுமார் 2,500 ரூபாய் என்றால் ஏகாண்ட வீணையின் விலை 5,000 ரூபாய்'' என்றார் பரம்பரை பரம்பரையாக இத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் நடராஜன்.

இரண்டு பேர் தொடர்ந்து வேலை செய்தால், ஒரு வீணையைச் சுருதி சுத்தமாகத் தயாரிக்க ஒரு மாத காலம் ஆகுமாம்.

சிட்டிபாபு போன்ற பிரபல வித்வான்களுக்கெல்லாம் வீணை செய்து கொடுத்திருக்கிறார் நடராஜன்.



☛ தெர்மாகோலில் தேர்

சரபோஜி மன்னர் காசி யாத்திரை சென்றிருந்த போது, பித்தளையில் செம்பு பதிக்கப்பட்ட செம்புகளைக் காசியில் பார்த்திருக்கிறார். உடனே அதை வாங்கிக் கொண்டு வந்து, தஞ்சையிலுள்ள பத்தர்களிடம் காட்டி, ''இதுபோல் செய்ய முடியுமா?'' என்று கேட்டாராம். ''ஏன் முடியாது?'' என்று அதை விடவும் சிறப்பாகச் செய்திருக்கிறார்கள், தஞ்சாவூர்ப் பத்தர்கள்.

காலப்போக்கில் பித்தளையில், செம்போடு வெள்ளியையும் சேர்த்துச் செம்புகளைத் தயாரித்தார்கள். பிறகு, இன்னும் கற்பனை விரிய, அதுவே தஞ்சாவூர்த் தட்டுக்களாக அவர்களின் கைவண்ணம் பரிணமிக்க ஆரம்பித்து விட்டது! நுணுக்கமான வேலைப்பாடுகளும் சேர்ந்து கொண்டன.

''இப்போது வெறும் தஞ்சாவூர்த் தட்டுக்களை விட கடிகாரங்கள் பதிக்கப்பட்ட சுவர்க் கடிகாரத் தட்டுக்களுக்கு மக்களிடையே நல்ல வரவேற்பு இருக்கிறது'' என்கிறார் நான்கு தலைமுறைகளாக இக் கலைத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் அருணாசலப் பத்தர். இவர் ஜனாதிபதி பரிசெல்லாம் பெற்றவர்.

☛ பரஞ்சோதி



☛ ரவிச்சந்திரன்



☛ வேணுகோபால்





''சாதாரணப் பூமாலைகளையே செய்து கொண்டிருப்பதில் என்ன பயன்? அதிலேயே புதுமையாக ஏதாவது செய்ய




☛ பூவலங்காரத்தில் மாநாட்டு முகப்பு



☛ நெல்மணி மாலை

வேண்டாமா? அது தஞ்சை மண்ணின் பெருமையை உலகெங்கும் பரவச் செய்வதாக இருக்க வேண்டாமா?'' என்றார், 53-ல் தஞ்சைக் கலெக்டராக இருந்த பழனியப்பன்.

யோசித்தார் வேணுகோபால். தஞ்சை என்றதும் அனைவருக்கும் நினைவு வருவது பெரிய கோயில். அடுத்தது நெல். பூவுக்குப் பதில் நெல்மணிகளைத் தொடுத்தே மாலை கட்ட முடியுமா? முயன்று முயன்று வெற்றி கண்டார். கலெக்டர் மிகவும் பாராட்டினார்.

பாராட்டு உற்சாகத்தைத் தர, நெல் மாலைகளோடு, ஏலக்காய் மாலை, கிராம்பு மாலை, ஜவ்வாது மாலை என்று அவரது கற்பனை விரிந்து கொண்டே சென்றது. அனைத்திந்திய அளவிலான எல்லாத் தலைவர்களுக்கும் இவரது கைவண்ணத்தில் உருவாக்கப்பட்ட இந்த வித்தியாசமான மாலைகள் அணிவிக்கப்பட்டுப் பிரபலமாயின. அத்தனை ஏன்? சார்லஸ் - டயானா திருமணத்தின் போது கூட இவரிடம் ஸ்பெஷலாக ஆர்டர் செய்யப்பட்ட மாலைகள் கொண்டு செல்லப்பட்டன என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

''அதற்காக நான் புஷ்ப அலங்காரத்தையும் விட்டு விடவில்லை. மாலை கட்டுவதிலிருந்து எனது கற்பனையை விரிவுபடுத்தி, வரவேற்பு வளைவுகளையும் பெரிய பெரிய மாநாட்டுப் பந்தல் முகப்புகளையும் முழுக்க முழுக்கப் பூக்களைக் கொண்டே அலங்காரம் செய்ய ஆரம்பித்தேன்...'' என்கிறார் வேணுகோபால்.

''நெல்மணிகளைக் கொண்டு மாலை தொடுப்பதோடு திருப்தியடையாமல், சின்னச் சின்ன வடிவிலான தேர்களையும் நெல்மணிகளிலேயே செய்ய ஆரம்பித்தேன்!'' என்று சொல்லும் வேணுகோபால், எழுபது வயதுக்கு மேலாகி விட்ட இந்த நிலையிலும் தமது தொழிலில் இன்னும ஏதாவது புதுமைகளைச் செய்ய முடியுமா என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறார்!

மிகவும் பிரசித்தி பெற்ற தஞ்சை ஓவியங்களைப் பற்றி அனைவருக்கும் தெரியும். அதே தஞ்சை ஓவியங்களைக் கண்ணாடியில் வரைந்து கொண்டிருக்கிறார் ஈஸ்வர்லால். இதற்காகத் தேசிய விருதுகளையும் பெற்றிருக்கிறார்.

ஓவியப் பயிற்சி பெற்ற இவர், வெறும் ஓவியங்களோடு தமது கற்பனையைக் கட்டிப் போட விரும்பாமல், புதுமையாகச் செய்ய வேண்டுமென்று இந்தப் பயிற்சியைப் பெற்றாராம். அதன் விளைவுதான் இந்தக் கண்ணாடி ஓவியங்கள்.

ஓவியத்தில் எப்படி இவருக்கு நாட்டம் வந்தது?

''வாசலில் போடப்படும் கோலங்களைச் சிறு வயதில் பார்க்கும் போது, இதென்ன சில வகைக் கோலங்களையே தினமும் மாற்றி மாற்றிப் போடுகிறார்களே, புதுமையாகப் போட முடியாதா என்று நினைப்பேன். பிறகு நானே என் கற்பனைப்படி கோலமும் போட ஆரம்பித்தேன். அதுதான் எனது முதல் ஓவியப் பயிற்சி. அதுவே எனது ஓவிய அறிவுக்கு அஸ்திவாரமானது!'' என்கிறார் ஈஸ்வர்லால்.

பழைய வீட்டுவசதி வாரியக் குடியிருப்பிலிருக்கும் திருநாவுக்கரசு, வெறும் செம்புக் கம்பிகளைக் கொண்டே ஓவியங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார். பொருத்தமான துணிகளின் பின்னணியில்

# மண்டல மையங்கள் தண்டம்தானா?

தஞ்சையிலுள்ள தென்மண்டலப் பண்பாட்டு மையம் இதுவரை என்ன செய்திருக்கிறது? இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறது? என்று ஆராய்ந்தால் கிடைக்கும் தகவல்கள் அத்தனை உற்சாகமாக இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

சிதம்பரத்தில் நாட்டியாஞ்சலி நடத்தியிருக்கிறது. பல்வேறு மாநிலங்களில் பாரத உத்ஸவங்கள் நடத்தியிருக்கிறது. அவ்வப்போது தஞ்சையிலும் மற்ற மாநிலக் கலைஞர்களை வரவழைத்துக் கலை நிகழ்ச்சிகளை நடத்திக் கொண்டிருக்கிறது.



மக்களின் வரிப்பணத்தை ஏராளமாக விழுங்கிக் கொண்டு, அனைத்திந்திய அளவில் இதுபோல ஏழு மண்டலப் பண்பாட்டு மையங்கள் உள்ளன. தேசிய ஒருமைப்பாட்டுக்கு அல்லது மண்டல ஒருமைப்பாட்டுக்கேனும் உதவும் நோக்கில் இந்தப் பண்பாட்டு மையங்கள் என்ன சாதித்திருக்கின்றன? அந்தந்த மண்டலங்களைச் சேர்ந்த மாநிலங்களிலுள்ள கலைஞர்களின் முகவரிகளைச் சேகரித்து வைத்திருப்பது தவிர, குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய வெற்றியாக ஏதுமில்லை!

ஒருமைப்பாட்டைக் குலைப்பது என்று அரசியல்வாதிகள் கங்கணம் கட்டிக் கொண்டு காரியம் பண்ணும் போது, கலை நிகழ்ச்சிகள் தோற்றுத்தான் போக வேண்டும் போலும்!

- சார்லஸ்

இவரது கம்பி ஓவியங்கள் கவர்ச்சிகரமாகத்தான் இருக்கின்றன.

''ஒரு பொழுதுபோக்குக்காகத்தான் இப்படியொரு முயற்சியில் ஈடுபட்டுப் பார்த்தேன். இப்போது ஏராளமான நண்பர்கள் எனது கம்பி ஓவியங்களுக்கு ஆர்டர் தர ஆரம்பித்து விட்டார்கள்!'' என்கிறார் திருநாவுக்கரசு.

கலைகளின் பிறப்பிடமாகவும் வளர்ப்பிடமாகவும் விளங்கும் தஞ்சை நகரில், மக்களுக்குப் பயன்படும் வகையில் ஒரு கலையரங்கம் கூட இல்லாமலிருப்பது ஆச்சரியம்!

கலை நிகழ்ச்சிகள் நடத்துவதற்கென்றே அமைக்கப்பட்ட ஸ்ரீ சுதர்சன சபா, ஆங்கிலேயர் காலத்ததான ப்ரீமேசன் ஹால் போன்ற இடங்களெல்லாம் இன்று சாப்பாட்டு ஹோட்டல்களாகவும், மதுபானக் கடைகளாகவும், களியாட்ட கிளப்புகளாகவும் மாறிப் போய் விட்டன என்பதுதான் வயிற்றெரிச்சலைக் கொட்டும் விஷயம்!

தஞ்சைக்குச் சுற்றுலாச் செல்லும் சாதாரண மக்கள், தஞ்சையின் நினைவாக இன்றைக்கும் வாங்கிச் செல்வது, தஞ்சாவூர் தலையாட்டி பொம்மைகள்தான்.

அடிப்பகுதி களிமண்ணாலும், மேற்பகுதி காகிதக் கூழாலும் ஆன இந்தத் தலையாட்டி பொம்மைகள் இப்போது அத்தனை கலைத் திறமையோடு, காண்போரைக் கவர்ந்திழுக்கும் வண்ணம் செய்யப்படுவதில்லை என்பதை ஒப்புக் கொள்கிறார்கள், இத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ரவிச்சந்திரனும் பரஞ்சோதியும்.

''முன்பு எங்களைப் போன்றோர் செய்யும் களிமண் பொம்மைகளுக்குத்தான் நல்ல வரவேற்பு இருந்தது. அதனால் எங்களுக்கும் ஓர் உற்சாகம் இருந்தது. இப்போது இதைப் பிளாஸ்டிக்கிலேயே செய்ய ஆரம்பித்து விட்டார்கள். அது எப்போதும் உடையாது என்பதால், மக்களும் அதிக விலை கொடுத்தாவது அதைத்தான் வாங்க விரும்புகிறார்கள். அதனால், எங்கள் தொழில் ஏதோ வாய்க்கும் வயிற்றுக்கும் தான் கட்டி வருகிறது!'' என்கிறார்கள் அவர்கள்.

ஒருவேளை அமைச்சர்கள், அரசியல்வாதிகள் போல புதுமையாகத் தலையாட்டி பொம்மை தயாரித்தால் வியாபாரம் பெருகலாம்!

- ப்ரியன்


ஆஹா! நேருஜி படம் என்ன அழகா இருக்கு...!
நம்ம மன்மோகன் சிங்கும் சிதம்பரமும் சேர்ந்து தத்ரூபமா வரைஞ்சிருக்காங்க!
புதிய தொழில் கொள்கை
திருப்பதி மாநாடு


எல்லாம் பெண் எம்.எல்.ஏக்களும் வந்துட்டா சட்டசபை நிறைஞ்சிடும்னு அம்மா சொன்னாங்களே...
இப்ப வேற தனி பெண் போலீஸ் நிலையத்தை திறந்து வச்சிருக்காங்களே...
அடுத்தாப்புல முழுக்க முழுக்க பெண்கள் மட்டுமே கொண்ட அமைச்சரவை அமைக்கப் போறேன்னு சொல்லிட்டா என்ன பண்றது...?
நெடுஞ்செழியன்
வீரப்பன்


திருப்பதி மாநாட்டுக்கு வர மாட்டேன்...


வரவே மாட்டேன்...
வந்துட்டேன்...!
நரசிம்மராவ்!



# கல்கி



1992
ஏப்ரல் 26
மலர் : 50
இதழ் : 39
ஆங்கீரச
சித்திரை 14

## நேருயிஸம் தொடர்கிறதாம்!
## வேறுயிஸம் வேண்டாமாம்!

கடுமையான வெயில் கொளுத்த, போலீஸ்காரர்கள் மொட்டையடித்துக் கொள்ள, பெண் தொண்டர் ஒருவரிடம் சிலர் வம்பு பண்ண, கைகலப்பைக் கட்டுப்படுத்த போலீஸ் தடியடி நடத்த, காங்கிரஸ் மாநாடு திருப்பதியில் அமர்க்கள மாக நடந்தேறியது.

பங்காரப்பா முறைத்துக் கொள்ள, மூப்பனார் பாஸ் காட்டி உள்ளே நுழைய, வாழப்பாடியார் சந்திரகாசின் கருத்துக்கு மறுப்புத் தெரிவிக்க, சோனியா வராமலிருக்க வசதியான தேதிகளில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது.

ஆந்திர அரசு இந்த மாநாடு நிமித்தம் கோடிக்கணக்கில் செலவழித்திருக்கும் - உறுதி. "பிரதமர் முதலிய வி. ஐ. பிக்கள் வரும் போது, செலவாகாமல் இருக்குமா? எல்லாம் அத்தியாவசிய செலவினங்களே" என்ற தவறான விளக்கம் அளிக்கப்படும் என்பதிலும் ஐயமில்லை.

இவை ஒருபுறம் இருக்க, காங்கிரஸ் மாநாட்டின் முக்கிய மான அம்சம், அதன் பொருளாதாரக் கொள்கை விளக்கமே. முன்பு 1955-ல் ஆவடி காங்கிரஸ் நடந்த போது, நேருஜி யோச னைப்படி சோஷலிஸக் கொள்கையை சுவீகாரம் செய்தது காங்கிரஸ். "சோஷலிஸ பாணி சமுதாயம்" "ஜனநாயக சோஷலிஸம்" என்றெல்லாம் புதிய சொற்றொடர்கள் உருவா யின. நிகர விளைவு, சோஷலிஸ்டுக் கட்சிகள் மவுசு இழந்து, சிறிது சிறிதாக மங்கி, மறைந்து போயின.

காங்கிரஸ் இடதுசாரிக் கொள்கையை ஏற்றதும் அதற்குச் சரியான மாற்றுக் கட்சியாக அமையக் கூடியது ஒரு வலது சாரிக் கட்சியே என்ற கருத்தில் சுதந்திராக் கட்சியைத் தொடங்கினார் ராஜாஜி. இன்று நரசிம்மராவ் தலைமையில் மன்மோகன் சிங்கும், பா. சிதம்பரமும் சுதந்திராக் கொள்கை களைத்தான் கடன் வாங்கி அமுல்படுத்திக் கொண்டிருக்கி றார்கள். ஆனால் ராஜாஜி பற்றி மூச்சுக் கூட விட மாட் டார்கள். "இதுவும் நேருஜி வகுத்த கொள்கைகளே - நேரு விஸம் தான் இன்னும் தொடர்கிறது, நாளையும் தொடரும்" என்கிறார்கள். சொல்லி விட்டுப் போகட்டும். நமக்கு ஆட்சே பணை இல்லை. எல்லாப் பெருமையும் நேருஜிக்கே போய்ச் சேரட்டும். ராஜாஜிக்கு ஒன்றும் வேண்டாம். அப்படி ஒரு மேதையை இருட்டடிப்புச் செய்தாவது நாடு உருப்பட்டால் சரி என்று நாமும் எண்ணுகிறோம். விட்டுக் கொடுக்கத் தயாராய் இருக்கிறோம்.

ஆனால் ஒன்று. செய்கிற காரியத்தை ஒழுங்காகச் செய்ய வேண்டும். ஆற்றில் ஒரு கால், சேற்றில் ஒரு கால் என்ற விவகாரம் உதவாது. சுதந்திரப் பொருளாதார - தொழில் கொள்கையைப் பின்பற்றியபடியே சோஷலிஸ சித்தாந்தப் படியும் காரியங்கள் நடக்க வேண்டும் என்று எதிர்பார்த்தால் குழப்பம்தான் மேலோங்குமே தவிர, நாடு வேகமாக முன்னேறாது. கட்சிக்குள் இருக்கிற சில அரைவேக்காடு களுக்குப் பயந்து பயந்து நிதி அமைச்சரும், தொழில் அமைச் சரும் நடந்து கொள்வது என்றால் எதிர்பார்க்கும் பலன் கிட்டாது. தைரியம் வேண்டும்.

நமது நிதியமைச்சர் டோக்கியோவில் தைரியமாகத்தான் பேசுகிறார். ஆனால் நாடு திரும்பியதும் நான் அந்த அர்த்தத் தில் கூறவில்லை. அப்படிப் பேசவில்லை என்று குழப்பமான விளக்கம் தருகிறார். ஒருவேளை இது எல்லோரையும் அணைத்துச் சென்றபடியே காரியத்தையும் படிப்படியாகச் சாதித்துக் கொண்டு போக ஒரு தந்திரோபாயமாக இருக்க லாம். அவ்வாறு என்றால் பிரதமரையும் நிதி அமைச்சரையும் வாழ்த்தலாம். சாணக்கியமா? பயமா? மன்மோகனின் மனசுக் குள் புகுந்து பார்த்தால்தான் தெரியும்!

விடுதலைப் புலிகளுக்குத் தடைச் சட்டம், "புலி வருகிறது" கதையாக நில்லாமல், சட்டமாகவே நிறைவேற பச்சைக் கொடி காட்டப்பட்டுள்ளது. வரவேற்க வேண்டிய ஆரோக்கியத் திருப்பம்.

மாநாட்டில் தேர்தல் நடத்து காங்கிரஸை வழிநடத்திச் செல்லப் போகும் முக்கிய தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட சமயத்தில், அதில் பங்கேற்க தமிழக காங்கிர ஸுக்குத் துப்பு இல்லாது போனதுதான் பரிதாபம்.

# மேம்பாலம் வந்தால் மோட்சமே கிடைத்தது போல!

## தஞ்சை : ஒரு ரவுண்ட் அப் :

டாக்டர்கள்! உதாரணத்திற்கு, இரண்டு பர்லாங் தூரம் உள்ள தெற்கு அலங்கத்தை மட்டும் எடுத்துக் கொண்டால், அங்கு மட்டும் சுமார் நூற்றைம்பது டாக்டர்கள்; நூற்றுக்கு மேற்பட்ட மருந்துக் கடைகள்!

●● சொத்துக்களே இல்லாத மடம் ஒன்று இருக்கிறது. அதுதான் பீமராஜ் கோஸ்வாமி மடம். தமது மூன்று சிஷ்யர்களில் ஒருவரான பீமராஜ் கோஸ்வாமியின் பெயரில் இதை நிறுவியவர், மராட்டிய மன்னன் சிவாஜிக்குக் குருவாயிருந்த சமர்த்த ராமதாஸர். இத்தனை செல்வாக்குள்ளவர் நிறுவிய மடத்துக்கா சொத்துக்கள் இல்லை? ''ஆமாம்; மடத்துக்காகச் சொத்துக்களைச் சேர்க்க அவர் விரும்பவில்லை. காரணம், நல்ல காரியங்களையும் இறைவனுக்கான வழிபாட்டு விழாக்களையும் நடத்தும் போது, ''நம்மால்தான் நடக்



ஆரம்ப கட்டத்தில் மேம்பாலம்

●● தஞ்சை பஸ் நிலையத்தில் இறங்கிய நீங்கள், கொஞ்சம் சோர்வாகக் காணப்பட்டால் போதும். ''உங்களுக்கு என்ன சார் ப்ராப்ளம்? எதுவாக இருந்தாலும் சரிப்படுத்தி விடலாம்; வாருங்கள்!'' என்று உங்களை ஏராளமான புரோக்கர்கள் வந்து நச்சரிக்கத் தொடங்கி விடுவார்கள். அவ்வளவும் மெடிகல் புரோக்கர்கள்! ஆம், தஞ்சையிலுள்ள பல டாக்டர்களுக்குப் புரோக்கர்கள் இருக்கிறார்கள், நோயாளிகளைப் பிடித்துத் தர! காரணம் அத்தனை



முத்துகிருஷ்ணன்



துளஜேந்திர ராஜா

☛ குறுகலான கீழ்ப்பாலம்



கிறது'' என்கிற அகங்காரம் யாருக்கும் வந்து விடக்கூடாது. மடத்தின் சொத்துக்களை நிர்வகிக்கும் மடாதிபதிகளும் இந்த அகங்காரத்திற்கு விதி விலக்கு அல்ல என்பதால், அவர்கள் எப்போதும் பிட்சை எடுத்தே மடத்தை நடத்த வேண்டும் என்று எங்கள் குருஜி விரும்பினார். அதனால்தான் சொத்துக்கள் ஏதும் இல்லை. இன்றைக்கும் மடத்தில் நடக்கும் விசேஷ காரியங்களைப் பிட்சையின் மூலம்தான் நடத்திக் கொண்டிருக்கிறேன்'' என்கிறார் இதன் பத்தாவது மடாதிபதியான முரளிதர் லட்சுமண் கோஸ்வாமி. இவர் மடாதிபதியானாலும் குடும்பஸ்தர். சென்னையிலுள்ள தனியார் நிறுவனத்தில் வேலை பார்க்கிறார்!

●● தஞ்சை மருத்துவக் கல்லூரி விடுதியில், கடந்த 6.11.90 ல் இரண்டு மாணவிகள் கொலை செய்யப்பட்டார்களே, அந்த விஷயம் என்னவாயிற்று? தஞ்சை மாவட்டக் காவல் துறைக் கண்காணிப்பாளர் டி.கே. ராஜேந்திரனிடம் இந்தக் கேள்வியைக் கேட்டபோது, ''அந்த வழக்கு கிரைம் பிராஞ்ச் சி.ஐ.டி.யிடம் ஒப்படைக்கப்பட்டு விட்டது. அவர்களிடம்தான் அது பற்றிக் கேட்க வேண்டும்'' என்று சொல்கிறார். அவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? கொலையாளிகளைக் கண்டுபிடிக்க இன்னும் எத்தனை ஆண்டுகள் ஆகும்?

●● 'ஒரு ரூபாய் ஆஸ்பத்திரி' என்ற பெயரில் ஓர் ஆஸ்பத்திரி. இது சஸ்வரி நகரிலுள்ள ஸ்டேட் பாங்க் காலனியில் இயங்கிக் கொண்டிருக்கிறது. மாலை வேளைகளில் மட்டும் இயங்கும் இதில், தொண்டுள்ளம் படைத்த டாக்டர்கள் வந்து இலவசமாகச் சேவை செய்கிறார்கள். ஒரு ரூபாய்க்கே மருத்துவம் செய்து மருந்துகளும் தரப்படுகிறது. இதை முன்னின்று நடத்தி வருபவர், எல்.ஐ.சி.யில் பணி புரியும் முத்துகிருஷ்ணன் என்பவர். இவர் ராமகிருஷ்ண பரமஹம்சரின் பக்தர். பெரிய நோயாக இருந்தால் என்ன செய்வீர்கள்? ''தொண்டுள்ளம் படைத்த எத்தனையோ டாக்டர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய கிளினிக்குகளுக்கு அனுப்பி வைப்போம். அவர்களும் இலவசமாகவே மருத்துவம் செய்து அனுப்புவார்கள்!'' என்கிறார் முத்துகிருஷ்ணன். இவர், டொனேஷன் வாங்காத உயர்நிலைப் பள்ளி ஒன்றையும் நடத்திவருவது இன்னொரு சிறப்பு!

●● நமது முன்னோர்கள் எத்தனையோ சிறப்புக்களுடன் வாழ்ந்த அரண்மனையில், இப்போது எந்தச் சிறப்பும் இல்லாமல் வாழ்ந்து வருகிறார், மராட்டிய மன்னர்களின் வாரிசுகளில் ஒருவரான துளஜேந்திர ராஜா சாஹேப். அரண்மனையின் ஒரு சிறு பகுதியில் தான் வாழ்கிறார் என்றாலும், அதுவே ஒரு பெரிய அரண்மனை போல் உள்ளது. எல்லாம் தூசியும் ஒட்டடையுமாகக் காட்சி தருகின்றன. ''எனக்கு அரசு மான்யமாகத் தரும் மாதம் இருநூறு ரூபாயில் எப்படி இவற்றை நல்லபடியாகப் பராமரிக்க முடியும்?'' என்று கேட்கும் துளஜேந்திர ராஜாவின் இரு பிள்ளைகளும் பாங்க் வேலையில் இருக்கிறார்கள்.



●● தஞ்சையில் 'முதலியார்' என்று சொல்லிக் கொள்ளும் சிலர், உண்மையில் முதலியார்கள் இல்லை. ஜைனர்கள். அவர்கள் எப்படி முதலியார் ஆனார்கள்? ''முன்பு நடந்த சமயச் சண்டையில், சிறுபான்மையினராக இருந்த ஜைனர்கள், பெரும்பான்மை மதத்தவர்களால் கொடுமைப்படுத்தப்பட்ட போது, அவர்களிடமிருந்து தப்பிக்கத்தான் 'முதலியார்' என்று சொல்லிக்

☛ முரளிதர் லட்சுமண் கோஸ்வாமி

கொள்ள ஆரம்பித்தார்கள்! அந்தப் பழக்கம் இப்போதும் தொடர்ந்து வருகிறது!'' என்கிறார் ஜைனக் கோயிலான ஆதீஸ்வர ஸ்வாமி கோயிலின் அறங்காவலர் திருமதி ராஜலட்சுமி.

●● தஞ்சையில் நம்மைச் சந்தித்த பலரும் ஒட்டு மொத்தமாகச் சொன்னது, மேம்பாலம் பற்றித்தான். திருச்சிப் பக்கமிருந்து வரும் வாகனங்கள் இந்தக் குறுகலான ரயில்வே மேம்பாலத்தின் வழியாகத்தான் தஞ்சை நகருக்குள் நுழைய வேண்டும். பாலம் அபாயகரமான நிலைக்கு வந்துவிட்டதால் பஸ்களும் லாரிகளும் தடை செய்யப்பட்டு விட்டன. இதனால் அவை இரு கி.மீட்டருக்கு மேல் சுற்றி ரயில்வே கீழ்ப்பாலம் வழியாகத்தான் நகருக்குள் நுழைய வேண்டியிருக்கிறது. அதுவும் குறுகலான பாலம் என்பதால் போக்குவரத்து ஏக கஷ்டமாக இருக்கிறது. அண்மையில் தஞ்சையில் போட்டியிட்டு வென்ற வருவாய்த்துறை அமைச்சர் எஸ்.டி. சோமசுந்தரமும் வழக்கமான அரசியல்வாதிகளைப் போலவே தமது வெற்றிக்காகக் கொடுத்த வாக்குறுதிகளில், இந்த மேம்பாலத் திட்டத்தையும் கொடுத்திருக்கிறார். இப்போது மறந்து விட்டார் போலிருக்கிறது!

●● தஞ்சைப் பெரிய கோயில் எத்தனை பிரசித்தமானது! அதைப் பார்ப்பதற்காக எத்தனை வெளிநாட்டவர்கள் வருகிறார்கள். இந்த நிலையில் நுழைவுப் பகுதியாவது சுத்தமாக இருக்க வேண்டாமா? கோயிலைச் சுற்றியுள்ள அகழியில் தண்ணீரை நிரப்பி அழகுபடுத்தாவிட்டாலும், மக்கள் அசிங்கங்களை நிரப்பிக் கேவலப்படுத்தாமலாவது பார்த்துக் கொள்ளக் கூடாதா? சம்பந்தப்பட்டவர்களின் மூக்குகளுக்கு உணர்ச்சிகளே இல்லையா என்ன!



டி.கே. ராஜேந்திரன்

●● இப்போது குடிநீருக்குச் சிரமப்படுவது போல் அந்தக் காலத்தில் தஞ்சை மக்கள் சிரமப்பட்டதேயில்லை. காரணம், மழைக்காலங்களில் கிடைக்கும் தண்ணீர், சிவகங்கைக் குளத்தில் நிரம்பி, ஐயன் குளத்திற்கு வந்து நிரம்பிய பின், அதுவே கடைசியில் சாமந்தான் குளத்திலும் நிரம்புகிற மாதிரியான வசதிகள் இருந்தன. இப்போது எல்லாம் மாறிவிட்டன. சாமந்தான் குளத்தில் இப்போது தண்ணீருக்குப் பதில் குப்பைகளைப் போட்டு நிரப்பிக் கொண்டிருக்கிறார்கள்!



அரிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் அகழி

●● தஞ்சாவூருக்கு எப்படி இந்தப் பெயர் வந்தது தெரியுமா? 'தஞ்சன்' என்ற அரக்கனைச் சிவபெருமான் கொன்ற இடம் என்பதால்தான் 'அழகாபுரி' என்ற இடம் தஞ்சாவூர் ஆனதாம்! தஞ்சனைக் கொல்வதற்கு முன் எட்டுத் திசைகளிலும் அஷ்டமா சக்திகளையும் காவலுக்கு அமைத்தாராம் சிவபெருமான். அப்படிக் கிழக்குத் திசையில் அமைக்கப்பட்ட சக்திதான் இப்போ இருக்கும் புன்னை நல்லூர் மாரியம்மன் என்றும் சொல்லப்படுகிறது!

– எஸ்.ஐ., தில்லப்பா

# சப்புக் கொட்ட ஒரு தஞ்சை ஸ்பெஷல்!

திருநெல்வேலிக்கு அல்வா என்றால், தஞ்சைக்குக் குடமிளகாய் வற்றல். பொறுமையும் அவகாசமும் இருந்தால் செய்து பாருங்களேன்!

தேவை :

தஞ்சாவூர்க் குடமிளகாய் நிதான சைஸ் அல்லது சிறிய சைஸ் 1 கிலோ, தயிர் 1 லிட்டர் (சிறிது புளிப்பு உள்ள தயிர்), வெள்ளை உளுத்தம் பருப்பு 50 கிராம், வெந்தயம் 50 கிராம், உப்பு கால் கிலோ.



செய்முறை : முதலில் உளுத்தம் பருப்பையும், வெந்தயத்தையும் தண்ணீர் விட்டு ஊறவைத்து விடவும். மிளகாயை ஒவ்வொன்றாகச் சிறிது காம்பு வைத்து, மீதிக் காம்பை நறுக்கி விடவும். மிளகாயை லேசாகக் கீறி ஒரு பாத்திரத்தில் போடவும். கீறுவதற்குப் பதில், ஊசியால் குத்தியும் போடலாம். மிளகாய் சேதம் அடையாமல் ஜாக்கிரதையாகச் செய்தல் அவசியம்.

ஊறவைத்துள்ள பருப்பு, வெந்தயம் இவற்றை இட்லிக்கு அரைக்கிற மாதிரி அரைத்து வைத்துக் கொள்ளவும். எவர்சில்வர் அடுக்கில் நறுக்கிய மிளகாயினைப் போட்டு, அதன் மேல் அரைத்த விழுது, தயிர், உப்பு இவைகளையும் போட்டு, நன்றாகக் கலக்கி, மூடிவைத்து விடவும். மறுநாள் காலையில் மிளகாயை நன்றாகக் கிளறி விட்டு மூடி வைத்து விடவும். மூன்றாம் நாள் காலையில் நல்ல வெயிலில் ஒரு பிளாஸ்டிக் பேப்பரில் மிளகாய்க் கலவையை உலர்த்தவும். அருகிலேயே மிளகாய் ஊறவைத்த பாத்திரத்தையும் வைத்து விடவும். மாலையில் மிளகாயினை எடுத்துத் திரும்ப அதே பாத்திரத்தில் போட்டுக் கலக்கி மூடி வைத்து விடவும். இரண்டு நாட்கள் இதுபோல் செய்தால், அநேகமாக எல்லா ஜலமும் (மிளகாய் இழுத்துக் கொண்டது போக) காய்ந்து விடும். ஜலம் முழுதும் வற்றியதும் மிளகாயை இன்னொரு காய்ச்சல் போட்டு 'கல கல' என்று ஆனதும் (அது தான் பதம்) கண்ணாடி பாட்டில் அல்லது பிளாஸ்டிக் டப்பாவில் அள்ளி வைத்துக் கொள்ளவும்.

அவ்வப்போது தேவையான எண்ணெயை வாணலியில் வைத்துத் தேவையான மிளகாயினைப் போட்டுப் பொரித்து எடுத்து வைத்துக் கொள்ளலாம். 4, 5 நாள் வரை கெடாது. கோடை நாட்களில் இந்த ஊறுகாயுடன் 'ஜில்' லென்று மோர் சாதம் சாப்பிட்டால் ஊறுகாய்க்காக இன்னொரு தரம் சாப்பிடலாமே என்று தோன்றும்!

– கமலா ஜெயராமன்


## அடுத்த இதழில்...



●● தமிழ் சினிமாவில் பெண்கள்

– கவர் ஸ்டோரி





## 3

அலமாரியை நோக்கி அடுத்த அடி எடுத்து வைத்த போது, அறைக் கதவு திறக்கும் ஒலி கேட்டு நந்தினி தயங்கினாள். ஒருவேளை தேவராஜ் உள்ளே வருகிறானோ என்னவோ!

அருண்குமார் தந்த பரிசுப் பொருளை இப்போது எடுத்துப் பார்த்தால், தேவராஜ் அதற்கு ஒரு புது அர்த்தம் கற்பித்துக் கொள்ளக்கூடும்.

அருண்குமார் அவள் மனத்தைச் சலனப் படுத்தியிருக்கிறான் என்று அவனுக்குத் தெரியவந்தால், ஏதாவது முரட்டுத்தனமான சந்தேகங்களை அவன் வளர்த்துக் கொள்ளக்கூடும்.

நந்தினி தயக்கத்துடன் கதவுப் பக்கம் பார்த்தாள்.

உள்ளே வந்தது புவனா. தேவராஜின் தங்கை.

''வாங்க,'' என்றாள் நந்தினி மெல்லிய குரலில்.

உள்ளே வந்த புவனா, அறையில் இருந்த ஒரு கூடை நாற்காலியில், அவ



ளுடைய இளமை வயதுக்குரிய துடுக்குத் தனத்துடன் உட்கார்ந்தாள்.

''நீங்க செய்யறது எனக்குக் கொஞ்சங் கூடப் புடிக்கல அண்ணி.''

நந்தினி திகைத்தாள். புவனாவை அகன்ற பயக்கண்களுடன் பார்த்தாள்.

''அண்ணன் என்னை வாடி, போடீன்னு சொல்லுவாரு. இல்லன்னா வாம்மா, போம்மான்னுவாரு. நான் அண்ணனை வா, போன்னுதான் சொல்லு வேன். நீங்க மட்டும் என்னை மரியாதை யோட கூப்பிட்டா என்னை என்னவோ தூரமாத் தள்ளி வெச்சிட்டா மாதிரி இருக் குது.''

''நீ மட்டும் ஒங்கண்ணனை நீ, வான்னு சொல்லுவே. என்னை வாங்க போங்கன்னு சொல்லுவியா?''

''சரி சொல்லலை. நீ என்ன நெனைச் சிக்குவியோன்னுதான் வாங்க போங்கன் னேன்.''

''நாம ரெண்டு பேரும் ஃப்ரண்ட்ஸ்.''

''அப்படின்னா... என் கன்னத்துல ஒரு முத்தம் குடு.''

''ஏய்...''

''அண்ணனுக்கு மட்டுந்தான் குடுப் பியா?''

''ஏய்... ஏய்...''

நந்தினியின் இதழ்களில் தானாகப் புன்னகை மலர்ந்தது.

''இங்க வா.''

''வருவேன். அடிக்கக் கூடாது.''

''இல்லே.''

புவனாவின் கன்னத்தில் நந்தினி தன் உதடுகளை ஒற்றியெடுத்தாள். நிர்மலா கூட வீட்டில் இவ்வளவு நெருக்கமாகப் பழக மாட்டாள். வந்த முதல் நாளே இந்தப் பெண் இப்படி ஒட்டிக் கொள்கிறாளே என்று நந்தினிக்கு ஆச்சரியமாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

''நான் எதுக்கு வந்தேன்னு கேக்கவே இல்லியே அண்ணி.''

''சொல்லு.''

''நீ எப்ப ஆபீஸ் போகப் போறே?''

''ஒங்கண்ணனைத்தான் கேக்கணும். நான் ஆபீசுக்குப் போனா அவருக்குப் புடிக்குமோ, புடிக்காதோ?''

''அண்ணனைக் கேக்கறதா? நீ ஆபீஸ் போவலைன்னா இங்க டப்பா கிழிஞ்சிடும். எனக்கு உல்லி உல்லி வேணும். வெள்ளில ஒரு செட் நகை வேணும். பணத்துக்கு எங்க போவேன். கேட்டா அண்ணன்தான் அண்ணிகிட்டக் கேட்டு வாங்கிக்கன்னு சொன்னாரு. இப்ப இல்ல. கல்யாணத்துக்கு முன்னாலேயே. வாங்கித் தரியா?''

''ம்.''

''என்னடா வந்ததும் வராததும் 'இது வாங்கிக்குடு அது வாங்கிக் குடு'ன்னு கேக்க றாளேன்னுதானே யோசனை பண்றே?''

''சேச்சே.''

''பின்ன? இத பார் அண்ணி. அண்ணன் ஒரு மாதிரி சிடுமூஞ்சி. எப்பப்பாரு எரிஞ்சி எரிஞ்சி வுழுவாரு. நீதான் அண்ணனை மாத்தணும். ஜாலியா இருக்கக் கத்துக் குடுக் கணும். ஒரு சினிமா டிராமாவைப் பழக்கப் படுத்தணும். பாரேன், ஒனக்குக் கொழந்தை பொறந்ததுக்கப்புறந்தான் நீ ஹனிமூனுக்கே போவப் போறே.''

''கொழந்தையையும் கூட்டிக்கிட்டா?'' என்று புன்முறுவலுடன் கேட்டாள் நந்தினி.

''எங்கிட்ட வுட்டுடு. நீ நிம்மதியாப் போய்ட்டு வா!''

மனத்தில் நினைத்ததையெல்லாம் வெகுளித்தனமாகக் கொட்டிய இந்தக் குழந் தையை அதிகம் பிடித்திருந்தது. சில பேரைப் பார்த்தால் மனத்தில் கிளர்ச்சி உண்டாகும். நீண்ட நாட்களாகப் பழகிய வர்கள் போல ஓர் உணர்வு உண்டாகும். அவர்களுடன் இழைய வேண்டும் போலத் தோன்றும். புவனாவுடன் அப்படி இருக்கத் தோன்றியது நந்தினிக்கு.

''ஏய் புவனா, நான் ஆபீசுக்குப் போனா அண்ணன் எதுவும் சொல்ல மாட்டாரா?''

''ஒண்ணும் சொல்ல மாட்டாரு. ஆமா, ஆபீஸ் தேனாம்பேட்டைல இருக்குது. வீடு பெரம்பூர்ல இருக்குது. எப்படிப் போவேண்ணி?''

''பஸ்லதான்.''

''ஒனக்கு டிவிஎஸ் ஓட்டத் தெரியு மாண்ணி?''

''இருக்குதா?''

''ம்.''

''தெரியும். இங்க யார் ஓட்றது அதை?''

''நாந்தான். காலேஜுக்கு எடுத்துட்டுப் போறேன். பஸ்ல போனா பாய்ஸ் கிண்டல்

# நிலா மயக்கம்

சுபா

பண்ணுவாங்க. நெருங்கி நெருங்கி வந்து நிப்பாங்கன்னு லோன் போட்டு வாங்கிக் குடுத்திருக்காரு. ' நாளையிலேர்ந்து நாம ரெண்டு பேரும் சேர்ந்து போலாம். சேர்ந்து வரலாம். அண்ணன்தான் சொல்லியிருக் காரு..''

''ஏன்?''

''பஸ்ல போனா எங்க அழகான அண்ணியை எல்லோரும் பார்ப்பாங் களே... அது கூடாதில்ல?''

''இதையும் அண்ணந்தான் சொன் னாரா?''

''சொல்லுவாரா? அவர் நெனைப்பு எனக்குத் தெரியாதா?''

'ரம்யா டிரஸ் டிஸைனர்ஸ்' நந்தினி யின் வருகையால் திடீர் சுறுசுறுப்புப் பெற்ற மாதிரி இயங்கத் தொடங்கியது. அவளை அணுகி வந்து சூலம் விசாரித்த பெண்கள் எல்லாம் விலகிச் சென்று துணியை வெட்டுவதிலும், தைப்பதிலும், காஜா எடுப்பதிலும், இஸ்திரி போடுவதி லும் ஈடுபடத் தொடங்கினார்கள்.

நந்தினி தனக்கென்று இருந்த கண் ணாடி அறைக்குள் நுழைந்தாள். மேஜை யில் மூன்று நாள் தூசியின் நடுவே, அவள் புதிதாக வரையத் தொடங்கியிருந்த ஒரு துணி டிஸைன் அவள் வைத்து விட்டுச் சென்ற மாதிரியே இருந்தது.

நந்தினி ஃபுடிஸ்கொயரையும், செட் ஸ்கொயரையும் தொட்டாள். மனத்திற்கு உற்சாகமாக இருந்தது.

அவள் பென்சிலால் ஒரு கோடு போட்ட போது, கண்ணாடி வழியே கல்யாணி அவளை நோக்கி வருவது தெரிந்தது.

கல்யாணி வராதே. வராதே. என்னைப் பார்க்காதே. பேசாதே.

''நந்தினி?''

திமிர்ந்தாள்.

''கல்யாணி. வா. வா. நீ இன்னிக்கு வரலையோன்னு நெனைச்சேன்.''

''சந்தோஷமா இருக்கியா நந்தினி?''

''ம்.''

''என்னவோ போ. நீ செஞ்சதுதான் தப்பு.''

''பழகு வேணாமே கல்யாணி.''

''மனசு கேக்கலை. அவன் ஊர்லயே இல்லியாம். சொந்த ஊருக்குப் போய்ட் டானாம்.''

''..........''

''திரும்பி வருவானா இல்லியான்னு கூடத் தெரியலை.''

''.......''

''ஒரு நல்ல மனசைக் கோடாலியால வெட்டிட்ட...''

"கல்யாணி, ஏன் என்னைக் கொல்றே?"

"ஸாரி நந்தினி. அவன் கஷ்டப்படறானே. நல்லவன் அவன் வயிறெரிஞ்சிட்டான்னா நீ நல்லா இருக்க மாட்டியேன்னு தோணிச்சி. நீ பாட்டுக்கு ஒம் புருஷங்கிட்ட லவ்வில் பண்ணேன்னு சொல்லிக்கில்லி வைக்கப் போறே. இந்த ஆம்பளைங்கெல்லாம் ஒரு மாதிரி. அவனுங்க லவ் பண்ணி ஃபெயிலாயிட்டா பொண்டாட்டிகிட்ட சொல்லுவானுங்க. பொண்டாட்டி அதைத் தப்பா எடுத்துக்கக் கூடாதுன்னு எதிர்பார்ப்பாங்க. பொண்டாட்டி லவ் பண்ணேன்னு சொன்னா அவ்வளவுதான். சந்தேகம் வந்துரும். லவ் பண்ணவன் எங்க தொட்டானோ. என்ன பண்ணானோன்னு நெனைச்சி நெனைச்சி அவஸ்தைப்பட ஆரம்பிச்சிடுவானுங்க. ஒம் புருஷன் எப்படி? ஒம் முந்தானையில இருக்கறவரா? இல்லை...?"

நந்தினி பதில் சொல்லாமல் பென்சில் கோட்டைத் தீட்டத் தொடங்கினாள். மனம் ரணமாக இருந்தது. கல்யாணி சின்னச் சின்னக் கூர் ஊசிகளைக் கொண்டு வந்து குத்தி விட்டுப் போய் விட்டாள். நந்தினி கசப்பையெல்லாம் விழுங்கி விட்டு, மிகுந்த முனைப்போடு கவனத்தை வேலையில் செலுத்த முற்பட்டாள்.

**சா**யங்காலம் ஆபீஸ் வாசலில் புவனா காத்திருந்தாள். அவள் முகம் கண்டதும் சிரித்தாள். நந்தினியும் சிரித்தாள்.

"என்ன அண்ணி. வேலை ஜாஸ்தியா?"

"ஏன்?"

"கடனேன்னு சிரிக்கறே? ஆனா அண்ணி... வேலைக்குப் போய்ட்டு சில பொம்பளைங்க திரும்பி வர்றப்ப பாத்தாப் பாவமாயிருக்கும். ஒன்னைப் பாத்தா அப்படியெல்லாம் இல்ல."

"எப்படி இருக்குது?"

"ரோட்லயே ஒரு முத்தா குடுக்கணுமாட்டம் இருக்குது."

"ஏய்... ஏய்" நந்தினி அவளிடமிருந்து விலகி முகம் திருப்பினாள்.

"கேக்கறேன்னு தப்பா எடுத்துக்காத அண்ணி. கல்யாணத்துக்கு முன்னால நீ யாரையாவது லவ் பண்ணியாண்ணி? இல்லை ஒன்னை யாராவது லவ் பண்ணாங்களா?"

நந்தினி, எதிர்பாராத நேரத்தில் ஒரு பாறாங்கல் நெஞ்சை வந்து தாக்கிய மாதிரி உணர்ந்தாள்.

(தொடரும்)

# மாற்றம்

ராமேஸ்வரம் எக்ஸ்பிரஸ் தஞ்சாவூரில் அதிகாலை ஐந்து மணிக்கு நின்ற போது, இரண்டு செருப்புகளையும் அவசரமாகத் தேடியணிந்து சூட்கேஸ் மற்றும் சிறிய அட்டைப் பெட்டியுடன் இறங்கிக் கொண்டேன்.

வானத்தில் கறுப்பு கலைந்திருந்தது.

நான் சாலையைக் கடந்து எதிர்ப்புறம், சாம்பிராணி போட்டுக் கொண்டிருந்த சிறிய ஹோட்டலுக்கு வந்தேன்.

''கொஞ்சம் சர்க்கரை கம்மியா ஒரு காப்பி.''

ஆஸ்திரேலியன் கிரேப்ஸ் கொண்ட அட்டைப் பெட்டியைக் கீழே வைத்தேன். அண்ணனுக்கு இந்தத் திராட்சை ரொம்பப் பிடிக்கும். சென்னைக்கு வரும்போதெல் லாம் இரண்டு, மூன்று கிலோ வாங்கிக் கொண்டுதான் புறப்படுவார்.

பாப்பாநாட்டில் இந்த திராட்சை கிடைப்பதில்லை என்பதற்கு ரொம்ப வருத் தப்படுவார். குழந்தையின் ஆர்வத்துடன் காம்பு பிய்த்து அவர் சாப்பிடுவதே தனி அழகு.

காப்பி வரும் வரைக்கும் நான் வேட்டி முனையால் என் கண்ணாடியைத் துடைத் துக் கொண்டிருந்தேன். இன்னும் நான் கைந்து மாதங்களில் காடராக்ட் ஆபரேஷன் செய்து கொள்ள வேண்டும்.

நுரைக்கக் காப்பி வந்தது. நல்ல சூட்டில் இருந்தது. மிடறு மிடறாக நாக்கில் கொஞ்ச நேரம் நிறுத்தி, ருசியை அனுபவித்தபடி பருகத் துவங்கினேன்.

இந்தக் காப்பி நன்றாகத்தான் இருக்கிறது. ஆனால் ஜானகி போடும் காப்பி மாதிரி வரவே வராது. அவள் உடம்புக்கு முடியாமல் படுத்த சமயங்களில் நானும் தான் காப்பி போட்டுப் பார்த்திருக்கிறேன். எனக்கே பிடித்துத் தொலையாது. டிகாக்ஷன் இறக்குவதில் ஒரு சூட்சமம் இருக்க வேண்டும்.

'ஜானகி, ஒரு நாளைக்காவது பிரமாதமா இருக்குன்னு உன் வாயாலேயே சொல்ற மாதிரி காப்பி போட்டுத் தந்து அசத்தறேன் பாரு' - அடிக்கடி சொல்வேன்.

ஆனால் அசத்தியதே இல்லை. அதற்குள் போய்ச் சேர்ந்து விட்டாள். தன் இரண்டு ஆசைகளில் ஒன்றை மட்டும் நிறை வேற்றிக் கொண்டு, போன மாதம், படுக் காமல், சிரமியாமல் நிம்மதியாகப் போய்ச் சேர்ந்து விட்டாள்.

காப்பிக்குப் பணம் கொடுத்து விட்டு, வெளியே வந்து ரிக்ஷா பிடித்து பஸ் ஸ்டாண்ட் வந்தேன்.

அதிகாலையிலும் நல்ல கூட்டம் இருந்தது. இந்த பஸ் ஸ்டாண்ட் எவ்வளவு பெரிதாகி விட்டது. சுற்றிலும் எவ்வளவு கட்டடங்கள் வந்து விட்டன. சில ஊர்க ளுக்கு எத்தனை வருஷம் இடைவெளி விட்டுச் சென்றாலும் ஓர் அடையாளமும் தொலைந்து போகாமல் அப்படியே இருக் கும். சில ஊர்களுக்கு மூன்று மாதம் இடைவெளி விட்டுச் சென்றாலே மலைப் பில் ஆழ்த்தும் மாற்றங்கள் இருக்கும்.

தஞ்சாவூர் நிறையத்தான் மாறியிருக் கிறது. மாற்றம் எங்கும் எதிலும் ஓர் ஆதார மான விஷயம். அமைப்பு மாறுகிறது. நாக ரிகம் மாறுகிறது. ரசனை மாறுகிறது. சூழ் நிலை மாறுகிறது. எண்ணம் மாறுகிறது.

என் தீர்மானத்தின் திடீர் மாற்றத்தில் முரளிக்கும், குமரேசனுக்கும் கொஞ்சம் கூடச் சம்மதமில்லை.

''விளையாடறீங்களா அப்பா? அம்மா இருந்த வரைக்கும் நீங்களும், அம்மாவும் சேர்ந்து ஒரு வீட்ல இருந்தீங்க. இப்ப அம்மா இல்லை. நீங்க மட்டும் தனியா எதுக்குக் கஷ்டப்படணும்? தடிப் பசங்க மாதிரி நாங்க ரெண்டு பேர் எதுக்கு இருக் கோம்? என் வீட்ல ஆறு மாசம், தம்பி வீட்ல ஆறு மாசம் இருங்கப்பா. உங்க ரெண்டு மரு மகள்களும் உங்களைக் கவனிக்கறதி லியோ, இல்லை மரியாதை கொடுக்கறதி லேயோ என்னைக்காச்சும் குறை வெச்சி ருக்காங்களா?''

''அதெல்லாம் இல்லைப்பா. நான் சொல்ல வந்ததை முதல்ல முழுசாக் கேட் டுக்கங்க. நான் தனியா இருக்கணும்னு ஆசைப்படறேன்னு சொன்னேன். ஆனா இங்கே மெட்ராஸ்ல இல்லை, கிராமத்தில. நம்ம நிலத்தை உங்க பெரியப்பாதான் இத்தனை வருஷமா சாகுபடி பார்த்துக்கிட் டிருக்கார். கிட்டத்தட்ட முப்பத்தஞ்சி வரு ஷமா மெட்ராஸ்ல வாழ்ந்தாச்சு. சலிச்சுப் போச்சப்பா. உத்தியோகத்துக்காகக் கிரா மத்தை விட்டு வர வேண்டியதாப் போச்சு. இப்போ உத்தியோகமும் இல்லை.

அவனும் இல்லை. நான் பொறந்து வளர்ந்த கிராமத்திலேயே மிச்ச காலம் முழுக்க இருந்துடலாம்னு ஆசைப்படறேன்.''

எவ்வளவோ சமாதானங்கள். விவாதங்கள்.... நான் பிடிவாதமாக அவர்கள் சொன்னதை ஏற்க மறுத்து விட்டேன்.



**பா**ப்பாநாடு வழியாகச் செல்கிற பட்டுக்கோட்டை பஸ்சில் ஏறி ஒரு ஜன்னலோரமாக அமர்ந்து கொண்டேன். பஸ் புறப்பட்டது. சில நிமிடங்களில் ஊர் எல்லையைக் கடந்ததுமே சூரியன் சிவப்புப் பந்தாக உலா துவங்கியிருக்க, காற்றுக்கு நெளியும் பயிர்களின் ஓரங்களில் இதமான வெளிச்ச மின்னல். சில்லென்று தன் மொழியில் ஆறுதல் சொல்லும்விதமாகக் காற்று மேனியில் வருடிக் கொடுத்தது.

கிராமத்திற்குப் போகிறேன் என்றதும் இரண்டு பையன்களுமே நான் ஏதோ அவர்களை வெறுப்பது போலவும், அவர்கள் வீட்டில் எனக்குப் போதிய மரியாதை கிடைக்காது என்று சந்தேகப்படுவது போலவும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

என் உண்மையான உணர்வுகள் அவர்களுக்குப் புரியவில்லை. புரிய வைக்க முயற்சி செய்தும் பலனில்லை.

திருவல்லிக்கேணி சந்தில் அறுநூறு ரூபாய் வாடகையில் ஒரு மாடிப் போர்ஷனில் முப்பத்தைந்து வருஷம் வாழ்ந்த எனக்கு நியாயமாகப் பைத்தியம் பிடித்திருக்க வேண்டும்.

நடைமுறை வாழ்வில்தான் எத்தனை நெருக்கடிகள். எட்டு போர்ஷன்களுக்கும் ஒரே ஒரு பாத்ரூம். ஒரே ஒரு லெட்ரின். இருபத்தி நாலு மணி நேரமும் யாராவது ஒருவர் மாற்றி ஒருவர் கைப் பம்பு அடித்துக் கொண்டே இருப்பார்கள். சந்தை மாதிரி ஒரே சப்தம். டிராஃபிக் சப்தம் வேறு. எங்கள் சந்தில் இருந்து மூக்கைப் பிடித்துக் கொள்ளாமல் ஒரு தடவை கூட மெயின் ரோட்டிற்கு நடந்து வந்ததாக நினைவில்லை.

நகரத்தில் எல்லோருக்கும் எதிலும் தலைபோகிற அவசரம். எந்த ரோட்டின் பிளாட்பாரத்திலாவது கைவீசி நடக்க முடிகிறதா? எல்லாவற்றுக்கும் காத்திருக்க வேண்டும். பால் வாங்க க்யூவில் நிற்க வேண்டும். ரேஷனுக்கு க்யூ. நல்ல ஓட்டலில் காப்பி சாப்பிடப் போனால் கூட ஓர் ஆசாமி டிபன் முடித்துப் போகும் வரை காத்திருக்க வேண்டும்.

இரண்டு பையன்களையும் படிக்க வைத்து, வேலையில் அமர்த்தி, ஒரே பெண்ணை இரண்டு வருஷம் வரன் தேடி மணமுடித்து வைத்து, ரிட்டயரான போது ஒரு பெரிய விடுதலை மாதிரிதான் இருந்தது.

அண்ணனுக்கு இப்போது எழுபது வயதுக்கு மேல் தாண்டி விட்டது. ஆனால் உடம்பில் தளர்ச்சி இல்லை. திடகாத்திரமும் குறையவில்லை. இன்றைக்கும் மண் வெட்டி எடுத்து மடை திறந்து தண்ணீர் பாய்ச்சுகிறார். ஒரு முழு நெல் மூட்டையை முயல் குட்டியைத் தூக்குவது போலத் தூக்கிப் புரட்டிப் போடுகிறார்.

**பட்டுக்கோட்டை பிரபாகர்**

இந்த ஆரோக்கியத்திற்குக் காரணம் - சுத்தமான காற்று. டென்ஷன் இல்லாத மனம். நகரத்தில் யாருக்கும் இவையிரண்டும் கிடைப்பதில்லை. யாரைப் பார்... 'ஒரே டென்ஷனா இருக்கு' என்கிறான். கல்லூரி மாணவனும் சொல்கிறான். குடும்பத் தலைவனும் சொல்கிறான். வயசான கிழவனும் சொல்கிறான்.

அண்ணி மறைந்த பிறகு, அண்ணன் சென்னையில் இருக்கும் தன் ஒரே பையனின் வீட்டிற்கு வந்தாரா? முடியவே முடியாதென்று விட்டார்.

நகர வாழ்க்கை சலித்துப் போய், பாசமிகு அண்ணனோடு கடைசிக் காலத்தைக் கிராமத்தில் கழிக்க விரும்பும் என் நுண்ணிய உணர்வை என் பையன்கள் புரிந்து கொள்ளப் போவதே இல்லை.

பாப்பாநாடு வந்து பஸ் நின்று இறங்கியதும் நான் வியந்து போனேன். இவ்வளவு தூரம் கிராமம் முகம் மாறிப் போய் விட்டதா? கிராமம் என்கிற வார்த்தையை உபயோகிக்க முடியாது போலிருக்கிறதே...

கடைசியாக நான் இங்கே வந்து பத்து வருடமிருக்கும். பத்து வருடத்தில் எவ்வளவு மாற்றங்கள்! டாக்ஸி ஸ்டாண்ட்! மூன்று டாக்ஸிகள்! அட! டாக்ஸியில் போகுமளவிற்கு நிறையப் பேர் உருவாகி விட்டார்களா? சினிமா போஸ்டர்கள்! ஒயோட்டர் கூட வந்து விட்டதா? கடைகள்! கடைகள்! அரசியல் கட்சிகளின் கொடி தாங்கிய கம்பங்கள்...

நான் நடந்தேன். சந்தடி கடந்து ஒரு வெட்டுச் சாலையில் நடக்க... எல்லாம் மாறியிருந்தாலும் காற்று மாறவில்லை என்பதை உணர்ந்தேன். வாய்க்காலில் சலசலத்து ஓடிய தண்ணீரில் கால்களை நனைத்துக் கொண்டேன்.

அண்ணனிடம் எப்படிச் சொல்லப் போகிறேன்? 'நிரந்தரமாக இங்கேயே வருவதாக முடிவெடுத்து விட்டேன் அண்ணா. விஷயத்தை உங்களிடம் சொல்லி விட்டு, இரண்டு தினங்கள் கழித்துச் சென்னை சென்று பீரோ, கட்டில், லக்கேஜ் எல்லாம் ஒரு லாரியில் போட்டு எடுத்து வர வேண்டும் என்றிருக்கிறேன். இதே வீட்டில் நான் உங்களோடு தங்கிக் கொள்வதால் அசௌகரியம் ஏதுமில்லையே?' என்று கேட்க வேண்டும்.

'என்னைக் கேட்கணுமாப்பா? உனக்கு இங்கே இல்லாத உரிமையா? வர்றப்பவே சாமான் செட்டோட வந்திருக்க வேண்டியதுதானே' என்று கண்டிக்கும் தொனியில் தான் கேட்பார்.

நான் அண்ணன் வீட்டுக்கு வந்த போது, நட்டு வைத்த கடப்பாறையில் முதுகெல்லாம் வியர்வை வழியத் தேங்காய் உரித்துக்

கொண்டிருந்த அண்ணன் திரும்பிப் பார்த்து பரவசமாகிப் போனார்.

நிமிர்ந்து திருத்திவிருந்த கயிற்றுக் கட்டிலை எடுத்துப் போட்டு, ''அடடடே... வாப்பா! எப்பவும் ஒரு கடுதாசி போட்டு டுவியே... வா. உக்காரு. எதில வந்தே?'' என்றார் அன்பாக. பார்வையில்தான் என்ன ஒரு கூர்மை.

''இராமேஸ்வரத்தில் வந்தேன். இந்தாங்க'' என்று பெட்டியை நீட்ட....

''என்ன இது?'' என்றார். குரல் இன்னும் வெண்கலம்தான்.

''ஆஸ்திரேலியன் கிரேப்ஸ். உங்க ளுக்கு ரொம்பப் பிடிக்குமேன்னு வாங் கிட்டு வந்தேன். எப்படி இருக்கீங்க அண்ணா?''

''நல்லாத்தான் இருக்கேன். ஆனா வயசு என்ன கொஞ்சமாவா ஆகுது? முந்தி மாதிரி மல்லுக்கட்டிக்கிட்டு ஒரு காரியம் பண்ண முடியறதில்லை. கொஞ்சம் மூச்சு வாங்குது. நீ எப்படி இருக்கே?''

''தினம் மூணு தினுசான மாத்திரை இருக்கு. பி.பி.க்கு, சுகருக்குன்னு தனித் த னி யா ட்ரீட்மெண்ட். பாண்டியன் வந்தானா சமீபத்தில?''

''போன வாரம் வந்திருந்தான். நாலு நாள் தங்கி எதையெதையோ எடுத்துச் சொல்லி என்னை ஒருவழியாச் சமாதானப் படுத்திட்டுத்தான் பு ற ப் ப ட் டு ப் போனான்.''

''என்ன?'' என்றேன்.

வீட்டுக்குள்ளிருந்து பழைய கால திண்டுக்கல் இரும்பு பீரோவை நான்கு பேர் தூக்கிக் கொண்டு வெளியே வர, எங்கள் கவனம் திரும்பியது.

''என்னண்ணா இது... பீரோவை எங்கே கொண்டு போறாங்க? பெய்ண்ட் அடிக்கிறதுக்கா?''

''இல்லை. வித்துட்டேன்ப்பா. உன் ஊர்லேயே மளிகைக் கடை செட்டியார் வாங்கிக்கிறேன்னார். கொடுத்துட்டேன்.''

''ஏன்னே விக்கணும்? ரொம்ப ராசியான பீரோவாச்சே?''

''ராசியானதுதான். உனக்குத் தெரியுது. எனக்குத் தெரியுது. என் புள்ளைக்குத் தெரி யலையே. மெட்ராஸ் வர்றப்ப இதெல்லாம் வித்துட்டு வந்துடுங்க, நம்ம வீட்ல இதை வைக்க இடமில்லைன்னுட்டான்.''

''புரியலையே...''

''அதாவதுப்பா... வயசும் எழுபதுக்கு மேல ஆச்சு. இன்னும் தனியா உழைச்சி யாருக்காகச் சம்பாதிக்கணும்னு ஆசைப்பட றீங்கன்னு கேக்கறான். கிராமத்திலேயே பொறந்து, வளர்ந்து, வாழ்க்கை பூரா இங்கேயேதான் கழிச்சாகணுமான்னு கேக்க றான். கடைசி காலத்திலேயாவது நிம்ம



தியா எங்களோட மெட்ராஸ் வந்து இருக்கலாமேங்கறான். திடீர்னு உடம்புக்கு முடியலைன்னா பக்கத்தில இருந்து இங்கே யார் கவனிப்பான்னு கேக்கறான். இந்தக் காலத்து நகரத்து வாழ்க்கை எப்படி இருக்குன்னு கொஞ்ச காலமாவது அனுபவிச்சிப் பாருங்கன்றான். டீ.வி., கார் இப்படி சௌகரியங்களை அடுத்த ஜென்மத்தில தான் அனுபவிக்கணுமான்னு கோபமாக் கேக்கறான். யோசிக்கப் பார்க்கறப்போ அவன் சொல்றதுலயும் ஒரு நியாயம் இருக்கிறதாப் படுது. ஒரே மாதிரி வாழ்ந்துகிட்டே இருக்கணும்னு ஏதாச்சும் சட்டமிருக்கா? அவங்களும் ஆசையாக் கூப்புடறாங்க, நானும் இங்கே தனியாவே இருந்து சலிச்சுப் போச்சு. அதனால நிலத்தைக் குத்தகைக்கு விட்டுட்டு, நான் மெட்ராஸ்ல பையன் வீட்டுக்கு வந்துடலாம்னு முடிவு பண்ணியிருக்கேன். நான் எடுத்த முடிவு சரிதானே தம்பி?'' என்றார்.

நான் மௌனமாகத் தலையசைத்தேன்.

''சரி. நீ என்ன விஷயமா வந்தேன்னு கேக்கவே இல்ல பாரு...''

எனக்குப் பதில் சொல்வதற்கு முன்பாக நிறைய அவகாசம் எடுத்துக் கொண்டு யோசிக்க வேண்டும் என்று பட்டது.

---



## இது வீராணம் குழாய் அல்ல!

படத்திலுள்ளது வீராணம் குழாய் அல்ல, பீரங்கி. 25 அடி நீளம் கொண்ட இந்த ராட்சச பீரங்கி தஞ்சை நகரிலுள்ள தாசமேடு என்னும் இடத்தில் இருக்கிறது. பீரங்கிக்கான இரும்புக் கனி பீஜப்பூர் கல்தாவிடமிருந்து வாங்கப்பட்டது. தென்னிந்தியாவிலேயே மிகப் பழமையானதாகக் கருதப்படும் இது தஞ்சைக் கருகிலுள்ள கொல்லுமேடு என்ற இடத்திலேயே செய்யப்பட்டதென்பது இன்னொரு சிறப்பு.

## முன்பு உப்பரிகை! இப்போது...?



மன்னர்கள் காற்று வாங்கும் உப்பரிகையைப் பார்த்திருக்கிறீர்களா? அருகில் உள்ளதுதான் உப்பரிகை. இது தஞ்சையை ஒட்டியுள்ள மானோஜிப்பட்டியில் இருக்கிறது. இதில் மொத்தம் பன்னிரண்டு ஜன்னல்கள் உள்ளன. வசதியாக உட்கார்ந்து காற்று வாங்க, நடுவில் கருங்கல்லால் ஆன எண்கோண வடிவ மேடை உள்ளது. கட்டியவர்கள் நாயக்கர்கள். அவர்களுக்குப் பிறகு மராட்டிய மன்னர்களும் நல்லபடியாகப் பாதுகாத்து வந்தனர். பிறகுதான் உப்பரிகை உதாசீனத்துக்கு உள்ளாகி விட்டது!

*படங்கள், தகவல் : தஞ்சை ஜயபாலன்*

## ஞானமலர் - 3



"வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்" என்று அரசு விளம்பரப்படுத்துகிறது. "முதலில் வீடு கொடு. பிறகு மரத்தை நாங்களே வளர்ப்போம்" என்று புதுக் கவிதை அதைக் கேலி செய்கிறது. உண்மையில் அரசும் சரி, மக்களும் சரி மரங்களின் அருமையை உணர்ந்ததாகத் தெரியவில்லை.

மரத்தைத் 'தரு' என்பது பழைய தமிழ்ப் பழக்கம். நிழல் தரும். மழை தரும். காய் தரும். கனி தரும். காற்றுத் தரும். காய்ந்து விழுந்தாலும் விறகாகத் தன்னையே தரும். இப்படித் தருவதால் அதன் பெயர் தரு. கேட்டதை எல்லாம் தருவது தேவலோகத்தின் கற்பகத்தரு என்ற

# மரங்கள்-நமது வரங்கள்

கற்பனையின் காரணம் இதுதான்.

தாவரங்களுக்கும் உயிர் உண்டு என்று விஞ்ஞானம் விவரிக்கும் முன்பே மெய்ஞானம் அதை வாழ்க்கை ஆக்கியது. சங்க இலக்கியத்தில் தாவரங்கள் நமது குடும்ப உறுப்பினர்கள். நற்றிணையில் 'விளையாடு ஆயமொடு' என்று தொடங்கும் பாடலில் ஓர் உண்மை தெரிகிறது.

தலைவன் - தலைவி - தனிமை மூன்றும் இணைந்த நல்ல காலம். அளவற்ற ஆவலோடு அருகிருக்கும் தலைவியை அணைக்க வருகிறான் தலைவன். உள்ளத் தால் வரவேற்று உடலால் எதிர்த்து நாணம் பொங்க எதிரே நின்ற பெரிய புன்னை மரத்தைச் சுட்டிக்காட்டினாள் தலைவி. மரத்தில் இருந்து யாரும் பார்க்கிறார்களா? என்று ஆராய்ந்தான் தலைவன். இல்லை என்று உறுதி செய்து கொண்டு இன்னும் நெருங்கினான். நாணம் பெருக, மறுபடியும் மரத்தைக் காட்டினாள் தலைவி. "மரத்திலிருந்து யாரும் பார்க்கவில்லை" என்றான் தலைவன். "மரம் பார்க்கிறதே" என்றாள் தலைவி!

அத்தோடு நிறுத்தவில்லை. "அவள் என் அக்காள்" என்று விவரமாக விளக்கினாள். இந்தத் தலைவியின் தாய் சிறிய வயதில் தோழியர் சூழ, புன்னை விதை களை மண்ணில் ஒளித்து விளையாடி மகிழ்ந்தாள். வீடு திரும்பியவள் புன்னையை மறந்தாள். அதுவோ முளை விட்டுச் செடியாகி, மண்ணின் மடியில் கிடந்தபடி வானத்தை ரசித்து இலையாட்டியது. அந்தப் புன்னைச் செடியை அடையாளம் கண்ட அன்னை, தனது முதல் படைப்பாகக் கருதி நீர் வார்த்தாள். தனக்குக் கிடைத்த நெய்யும் பாலும் பெய்து வளர்த்தாள். பின்னர் திருமணமாகி இந்தத் தலைவியைப் பெற்றாள். வளர்ந்து செழித்த புன்னையைக் காட்டி "இவள் உன் சகோதரி" என்று அறிமுகம் செய்தாள். அன்னை உணர்த்திய புன்னையின் பெருமையால், தாவர வர்க்கத்தைத் தன் வர்க்கமாகக் கருதினாள் தலைவி. தண்ணீர் விட்டாள். மரம் வாடினால் கண்ணீர் விட்டாள்.

அந்தப் புன்னை மர அக்காவின் முன்னர் காதலன் அணைப்பது அவளுக்கு நாணம் தருகிறது. கணவனே ஆனாலும் அக்கா முன்னால் அணைப்பது தங்கைக்கு வெட்கம் தராதா? தாவரங்கள் நமது உறவினர்கள். இல்லையென்றால் துளசி என்றும் வேம்பு என்றும் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பெயர் வைப்போமா?

சுகி சிவம்

நமது முன்னோர்கள், அரசாங்கத்தோடு மரங்களை இணைத்தவர். பண்டைய அரசர்கள் ஒவ்வொருவருக்கும் காவல் மரம் என்று ஒன்று உண்டு. அந்த இன மரத்தை அந்த மண் மக்கள் வெட்டுவது இல்லை. அது ராஜ துரோகம். மருதுபாண்டியர் வரலாற்றில் பெரிய மருது, சின்ன மருது என்று மருத மரங்கள் கொண்டாடப்பட்டதைப் பலரும் அறியலாம்.

அரசனை விடவும் ஆண்டவனுக்கே மரத்தை அர்ப்பணம் செய்தது அதிநுட்ப மானது. கடம்பு முருகனுக்கு உரியது. வேம்பு மாரியன்னைக்கு உரியது. பராசக்தி கதம்ப வன வாசினி. கற்பகம் என்ற தருவின் பெயர் கற்பகாம்பிகைக்கு உண்டு. மேலும் மயிலைக் கோயிலுக்குப் புன்னை மரம் ஸ்தலவிருட்சம். ஒவ்வொரு கோயிலிலும் எது ஸ்தல விருட்சமோ அந்த இன மரத்தை ஊரிலே யாருமே வெட்டக் கூடாது.

மேலை நாட்டு அம்மணி ஒருவர் ரசிகமணி டி. கே. சி. அவர்களுடன் உரையாடிய போது நடந்த ஒரு நிகழ்ச்சி. மேலை நாட்டார், கீழை நாட்டாரை விட பண்பாடு, கலாசாரத்தில் முதிர்ந்தவர் என்பது அம்மையார் அபிப்ராயம். இந்தியர்களைக் கேலி செய்து விட்டு, ''மனிதனை மனிதன் நேசிப்பதில் என்ன பெருமை இருக்கிறது. நீங்கள் மனிதர்களை நேசிக்க மட்டுமே கற்று இருக்கிறீர்கள். தாவரங்களையும் நாங்கள் நேசிக்கிறோம் தெரியுமோ!'' என்றார்.

அந்தனை பெரிய மீசைக்கு மேலேயும் சிரிப்பு வெளியே தெரியும்படி ரசிகமணி, ''அம்மணி... நீங்கள் மரங்களை நேசிக்கிறீர்கள். நாங்களோ அவற்றைப் பூசிக்கிறோம்'' என்ற பொருளில் "Of course you love trees... whereas we worship it" என்றாராம். வேப்ப மரத்துக்கு மஞ்சளும் குங்குமமும் வைத்துப் பூசிக்காத கிராமம் உண்டா?

இன்னும் ஓர் அழகு... வேப்ப மரத்துக்கும் அரச மரத்துக்கும் திருமணம் செய்து வைக்கும் விந்தையான சமயச் சடங்கு கூட உண்டு. சிலரது பார்வையில் இது மூடப் பழக்கம். ஆனால் இது சமய சாமர்த்தியம். நம்மை வாழ்விக்கும் மரங்களை நாம் வாழ வைப்பதற்காக, தாவரங்களின் ஜீவிதத்திற்காகத் தரப்பட்டது இந்தக் கடவுள் கவசம் - மத அங்கீகாரம் - சமய சாஸனம்.

தருக்களை வெட்டுவதைத் தவிர்ப்பதில் நாம் காட்டிய அக்கறை கந்தபுராணத்தில் வெளிப்படுகிறது. வள்ளி திருமணப் பகுதியில் அழகான காட்சி.



கோழிக்கோடு வட்டாரம் (முன்னாள் காலிகட்). எங்கு நோக்கினும் பசுமையின் ஆதிக்கம். ரம்மியமான சூழ்நிலை. நிம்மதியின் உறைவிடம். சிரிப்பும் கும்மாளமும் எங்கும் நிறைந்த உல்லாசப் பயணிகளின் வரிசைப் படகு பவனி. நாவில் நீர் சுரக்கும் உணவு வகைகளின் நறுமணம். அருகாமையில் எடக்கல் குகைகளிலுள்ள சிற்ப வேலைகள் நிறைந்த ஓர் அற்புத உலகம். வரலாறு படைத்த திப்பு சுல்தானின் வீர சாகசங்களைப் பறைசாற்றும் சுல்தான் பாட்டரி.

நினைப்புனத்தில் வள்ளி நிற்கிறாள். வேடுவ வடிவில் வந்த முருகன், காதல் மொழி பேசியும் வள்ளி கனியவில்லை. புறமனம் கரையவில்லை. அப்போது வள்ளியின் தந்தை நம்பிராஜன் அங்கு வந்து விட்டான். வள்ளி தவிக்கிறாள். தப்பிப் பிழைக்கும்படி முருகனிடம் மன்றாடிக் கேட்கிறாள். அவனோ நகரவில்லை. நம்பி ராஜன் நெருங்கி வந்து விட்டான். என்ன அதிசயம்.

முருகன் நின்ற இடத்தில் வேங்கை மரம் நின்றது. வேதங்களே வேராக, ஆகமங்கள் கிளையாக, ஞானமே மலராக விண்ணளாந்து நின்றது வேங்கைமரம். ''இந்த மரம் இங்கே முன்பு இல்லையே... இப்போது எப்படி வந்தது?'' என்றான் நம்பிராஜன்.

உடனே வள்ளி, ''எப்படி வந்தது என்று தெரியாது. ஆனால் எனக்குத் தோன்றாத் துணையாக இருக்கிறது. இருக்கட்டும்!'' என்றாள்.

திடீர் என்று முளைத்ததால் தீங்கு வருமோ என்று எண்ணி வெட்ட முனைந்தனர் வேடுவர். ''மரத்தை வெட்ட வேண் டாம்'' என்று நம்பிராஜன் ஆணை யிட்டான். ''தீங்கு வந்தால்...'' இது வேடு வர் கவலை. ''அப்படி என்னதான் ஆபத்து வரும் பார்த்து விடுவோமே!'' என்பது தலைவன் தெளிவு.

வெட்டுவதையே தொழிலாகக் கொண்ட வேடுவர்களே மரங்களை வெட் டாத போது, மற்றவர்கள் வெட்டலாமா? அசோகவனத்தில் மரங்கள் பரப்பிய கருணை நிழலில் சீதை சிறையிருந்தாள் என்பதைக் கேள்விப்பட்ட பிறகும் மரங் களை வெட்டலாமா? மாதங்களில் நான் மார்கழி என்ற கண்ணபிரான், மரங்களில் நான் அரச மரம் என்றதை மறக்க லாமா?

போதி மரத்தடியில் புத்தர் ஞானம் பெற்றார். புளிய மரத்தடியில் நம்மாழ்வார் ஞானம் தந்தார். அரச மரத்தடியில் அமர்ந்தபடி திருமந்திரம் செய்தார் திரு மூலர். குருந்த மரத்தடியில்தான் மணி வாசகர் குருவைக் கண்டார். உலகுக்கே நிழல் கொடுத்த ஞானிகளுக்கு நிழல் கொடுத்த பெருமை மரங்களுக்கு உண்டு. எந்த மரத்தையும் வெட்டாதீர்கள்.. அது எந்த ஞானிக்காகக் காத்திருக்கிறதோ? யாருக்குத் தெரியும்!

# சிவகங்கைப் பூங்காவின் சீரழிவு!



தஞ்சை நகரிலுள்ள சிவகங்கைப் பூங்கா சாதாரணப் பூங்காவல்ல. எத்தனையோ இளவரசிகள் தங்கள் தோழியருடன் ஆடிப் பாடி மகிழ்ந்த பூங்கா. எத்தனையோ இளவரசர்களுக்குத் தங்கள் காதலியரின் முகங்களை நினைவுபடுத்தி, அவர்களை ஏக்கப்பட வைத்த வண்ண வண்ண மலர்ச் செடிகளைக் கொண்டிருந்த பூங்கா.

ஆம்; இந்தப் பூங்கா, பிற்காலச் சோழப் பேரரசை (கி. பி. 846-ல்) நிறுவிய விஜயாலய சோழன் காலத்துக்கு முன்பே நிறுவப்பட்ட பூங்கா. தஞ்சை வெள்ளையர்கள் ஆட்சிக்கு உட்பட்ட பிறகு 1866-ல் தோற்றுவிக்கப்பட்ட தஞ்சை நகராட்சிவிடம் இந்தப் பூங்காவின் நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. அதன் பிறகுதான் தலைவலியும் ஆரம்பமானது!

இப்போது இப் பூங்காவுக்குள் சென்று பார்த்தால், ஓடாத குழந்தைகள் ரயில், உயிர்களைக் கையில் பிடித்துக் கொண்டு காத்திருக்கும் மரம், செடி கொடிகள். பறவைகள் இல்லாத கூண்டுகள்... என்று எல்லாம் சிதிலமாகிக் கிடக்கின்றன.

பூங்காவுக்குச் செல்பவர்கள் பார்த்து மகிழ்வதற்காக ஓரிடத்தில் சில மான்களை விட்டு வைத்திருக்கிறார்கள். அதைவிட அதிகமாக பூங்காவுக்குள் இருக்கும் அலுவலகத்துக்குள் மான் தோல்கள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன!

காரணம் கேட்ட போது, மான்கள் ஒன்றோடொன்று சண்டை போட்டுக் கொண்டு, கொம்பால் குத்திக் கொண்டு இறந்து போவதாகச் சொல்லுகிறார்கள். ஆனால், தஞ்சை நகர மக்கள் யாரும் இதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. தஞ்சைக்கு ஒவ்வொரு வி.ஐ.பி. வருகிறபோதெல்லாம் ஒவ்வொரு மான் விருந்தாக்கப்படுகிறது என்றே சொல்லுகிறார்கள்.

''பூங்காவுக்குள் செல்பவர்களிடம் கட்டணம் வசூலித்த போதிலும் தஞ்சை நகராட்சியால் இதைச் சரிவர நிர்வகிக்க முடியவில்லை என்றால், பேசாமல் பூங்காவை நிர்வகிக்கும் பொறுப்பைத் தொல்பொருள் ஆய்வுத் துறையிடம் ஒப்படைத்து விட வேண்டியதுதானே!'' என்பது தஞ்சைவாசிகளின் தரப்பு!

ஆனால், தஞ்சை நகராட்சியிடமும் கலெக்டரிடமும் கேட்டால், ''இதோ, சோழன் போக்குவரத்துக் கழகத்தினர் குழந்தைகள் ரயிலைச் சீர்படுத்திக் கொடுக்கப் போகிறார்கள். திருச்சி பி. எச். இ. எல். நிறுவனத்தினர் 'விஞ்ச்' ஒன்றையும் நிர்மாணித்துத் தரவுள்ளார்கள். பிறகு பாருங்கள்.... ரயில் மார்க்கமாகவும் பூங்காவைச் சுற்றிப் பார்க்கலாம்; ஆகாய மார்க்கமாகவும் பூங்காவின் எழிலைக் கண்டு மயங்கலாம்'' என்கிறார்கள்.

இருப்பினும் தஞ்சை மக்கள் நம்பத் தயாராயில்லை. காரணம், அவர்கள் இப்படி நிறையக் கேட்டுக் கேட்டு ஏமாந்திருக்கிறார்கள்!

- எஸ். ஐ.

# சிவகாமியின் சபதம்

## ஐம்பத்தாறாம் அத்தியாயம்
## மகேந்திரர் கோரிக்கை

மாமல்லர், பரஞ்சோதி முதலியவர்கள் காஞ்சிக்குத் திரும்பி வந்தபோது, மகேந்திர பல்லவரின் தேகநிலை முன்னைவிட மோசமாகியிருந்தது. அவர்கள் சிவகாமியை அழைத்து வரவில்லையென்று தெரிந்த பிற்பாடு, அவருடைய உடம்பு மேலும் நலிவடைந்தது.

திருவெண்காட்டு நமசிவாய வைத்தியர் எவ்வளவோ திறமையாக வைத்தியம் செய்தும், தேக நிலைமையில் அபிவிருத்தி ஏற்படவில்லை.

மகேந்திர பல்லவர் ஒருநாள் தம் புதல்வர் மாமல்லரையும் மந்திரி மண்டலத்தாரையும், படைத் தலைவர்களையும், கோட்டத் தலைவர்களையும் அழைத்து வரச் செய்தார்.

படுக்கையில் படுத்தபடியே சுற்றிலும் சூழ்ந்து நின்றவர்களைச் சக்கரவர்த்தி பார்த்தார். எல்லாருடைய கண்களிலும் கண்ணீர் கசிந்திருப்பதையும், எல்லாருடைய முகத்திலும் பக்தி விசுவாசம் ததும்பிக் கொண்டிருப்பதையும் கவனித்தார்.

மகேந்திர பல்லவரின் பழைய சிம்ம கர்ஜனைக் குரலைக் கேட்டிருந்தவர்கள், இப்போது அவருடைய மெலிந்த ஈனஸ்வரமான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டார்கள். தங்களுடைய உணர்ச்சியை வெளிக்காட்டாமல் தடுத்துக் கொள்ள முயன்றார்கள்.

மகேந்திர பல்லவர் சொன்னார் : ''நான் இந்தப் புகழ்பெற்ற பல்லவ சிம்மாசனத்தில் ஏறி, இன்றைக்கு இருபத்தைந்து வருஷம் ஆகிறது. இவ்வளவு காலமும் நீங்கள் காட்டிய பக்தியும் விசுவாசமும் இணையற்றவை. காஞ்சியின் புகழ் பாரத நாடெங்கும் ஓங்கி நின்ற காலத்தில், நீங்கள் என்னிடம் பக்தி விசுவாசத்துடன் நடந்து கொண்டீர்கள். என்னுடைய விருப்பமே கட்டளையாகவும் என்னுடைய வார்த்தையே சட்டமாகவும் பாவித்து வந்தீர்கள். அது பெரிய காரியமல்ல. நான் தவறுக்கு மேல் தவறாகச் செய்து வந்த காலத்திலும் காஞ்சியின் புகழ் மங்கி வந்த நாளிலும் படையெடுத்து வந்த பகைவர்களை முன்னேற விட்டுப் பின்வாங்கி வந்த காலத்திலும், காஞ்சிக் கோட்டைக்குள் நாம் மறைந்திருக்க வேண்டி வந்த காலத்திலும் என்னிடம் இடைவிடாத விசுவாசம் காட்டி வந்தீர்கள். மாறாத பக்தி செலுத்தி வந்தீர்கள். சளுக்க மன்னன் புலிகேசியை உங்களுடைய விருப்பத்திற்கு மாறாக நான் விருந்துக்கு அழைத்ததையும் அதனால் விளைந்த விபரீதங்களையும் நீங்கள் பொறுத்துக் கொண்டிருந்தீர்கள். எனக்கு அந்திய காலம் நெருங்கியிருக்கும் இந்தச் சமயத்தில் உங்களுக்கெல்லாம் என் மனத்தில் பொங்கிக் கொண்டிருக்கும் எல்லையற்ற நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நான் செய்த தவறுகளுக்காகவும் என்னால் உங்களுக்கெல்லாம் நேர்ந்த கஷ்டங்களுக்காகவும் மன்னிக்கும்படியாக ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன்...''

இவ்விதம் மகேந்திர பல்லவர் பேசிய போது, சபையிலே சிலர் விம்மி அழுதார்கள்.

அமரர் **கல்கி**

முதன் மந்திரி ஓர் அடி முன்னால் வந்து, ''பிரபு! இப்படியெல்லாம் பேசக் கூடாது என்று பிரார்த்திக்கிறேன். எங்களிடம் தாங்கள் மன்னிப்புக் கேட்பது எங்களைத் தண்டிப்பதேயாகும். தங்கள் மேல் இல்லாத குற்றங்களையெல்லாம் சுமத்திக் கொண்டு, எங்களை வேதனைக்கு ஆளாக்குகிறீர்கள். நடந்ததெல்லாம் விதிவசத்தினால் நடந்தது; சென்று போன காரியங்களைப் பற்றிச் சிந்திப்பதில் பயனில்லை!'' என்றார்.

மகேந்திர சக்கரவர்த்தி மேலும் கூறினார் :

''சாரங்கதேவ பட்டரின் மொழிகள் என்னை மேலும் உங்களிடம் நன்றிக்கடன் பட்டவனாகச் செய்கின்றன. இன்று உங்களையெல்லாம் நான் அழைத்ததன் காரணத்தைச் சொல்கிறேன். என் வாழ்நாளின் இறுதி நெருங்கி விட்டது. இன்னும் சில நாளைக்கெல்லாம் இந்த மெலிந்து நைந்த தேகத்திலிருந்து என் ஆவி பிரிந்து போய் விடும். என் அருமைக் குமாரன் நரசிம்மன் வேத விதிப்படி இறந்து போன தந்தைக்குச் செய்ய வேண்டிய உத்தரக் கிரியைகளைச் செய்வான்...'' என்று சக்கரவர்த்தி சொன்ன போது, மாமல்லர் தாங்க முடியாத துக்கமும் ஆத்திரமும் பொங்க, ''அப்பா! அப்பா!'' என்று அலறினார்.

மகேந்திர பல்லவர் அருகில் நின்ற மகனை அன்புடன் தழுவிக் கொண்டு, உச்சி முகந்து, ''குழந்தாய்! நான் சொல்ல வேண்டியதைச் சொல்லித்தான் ஆக வேண்டும். உனக்குக் கேட்பதற்குக் கஷ்டமாயிருந்தால் சற்று வெளியே போய் இருந்து விட்டு அப்புறம் வா!'' என்றார். ஆனால் அவ்விதம் மாமல்லர் வெளியேறவில்லை. மறுபடியும் மந்திரி பிரதானிகளைப் பார்த்துச் சக்கரவர்த்தி கூறினார் :

''என் அருமை மகன் எனக்குரிய உத்திரக் கிரியைகளைச் செய்வான். நீங்களும் காலஞ் சென்ற சக்கரவர்த்திக்குரிய மரியாதைகளைச் செய்வீர்கள். ஆனால், இதனாலெல்லாம் என் ஆத்மா சாந்தி அடையவே அடையாது. இப்போது நான் உங்களிடம் கேட்டுக் கொள்ளப் போகும் கோரிக்கையை நிறைவேற்றி வைத்தால் என் ஆத்மா சாந்தி அடையும். இல்லாவிட்டால் சொர்க்கத்திலே இருந்தாலும் என் ஆவி நிம்மதி அடையாது.''

''பிரபு! சொல்லுங்கள். தங்களுடைய ஆக்ஞை எதுவானாலும், அதை நிறைவேற்றி வைப்பதாக இங்குள்ளவர் அனைவரும் சபதம் செய்ய ஆயத்தமாயிருக்கிறோம்!'' என்று முதல் அமைச்சர் கூறினார்.

''என்னுடைய அஜாக்கிரதையினாலும் சளுக்க மன்னனின் வஞ்சகத்தினாலும் பல்லவ வம்சத்துக்குப் பெரிய அவமானம் நேர்ந்து விட்டதை நீங்கள் அறிவீர்கள். அறுநூறு வருஷத்து வீரப் புகழுக்கு என் காலத்தில் பங்கம் நேர்ந்து விட்டது. அந்த அவமானத்தை என்னாலே துடைக்க முடியவில்லை. இழந்து விட்ட பல்லவ வம்சத்துப் புகழை நிலைநாட்டாமலே நான் உங்களிடம் விடைபெற்றுக் கொள்கிறேன். நான் செய்ய முடியாமற்போன காரியத்தை நீங்கள் நிறைவேற்றி வைக்க வேண்டும். பல்லவ சைனியம் படையெடுத்துச் சென்று, சளுக்கரை வென்று, புலிகேசியைக் கொன்று, வாதாபி நகரை அழித்து, தீ வைத்து எரிக்க வேண்டும். வாதாபி நகரம் இருந்த இடத்தில் பல்லவ ஜயஸ்தம்பம் கம்பீரமாக வானளாவி நிற்க வேண்டும். அப்போதுதான் பல்லவ வம்சத்துக்கும் தமிழகத்தின் வீரத்துக்கும் நேர்ந்துள்ள களங்கம் நிவர்த்தியாகும். இதுவே என் கோரிக்கை. என்ன சொல்கிறீர்கள்? நிறைவேற்றுவீர்களா?''

''நிறைவேற்றுகிறோம்'', ''நிறைவேற்றுகிறோம்'' என்று ஏக காலத்தில் பல குரல்கள் ஒலித்தன.

''மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க! வீர மாமல்லர் வாழ்க!'' என்ற ஜயகோஷங்களும் முழங்கின.

மகேந்திர பல்லவர் இன்னொரு தடவை எல்லாரையும் பார்த்து, ''மறுமுறையும் உங்களுக்கு என் இருதயத்தில் பொங்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்'' என்றார்.

அப்போது முதல் அமைச்சர், ''பிரபு ஒரு விஷயம். தங்கள் கோரிக்கையை வெளியிட்ட போது, இங்குள்ள நாங்கள் அனைவரும் அதை நிறைவேற்றி வைப்பதாக ஒப்புக் கொண்டு கோஷித்தோம். ஆனால், முக்கியமாகத் தங்கள் கோரிக்கையை நிறைவேற்றி வைக்க வேண்டிய இருவரும் சும்மா இருந்தார்கள். குமார சக்கரவர்த்தியையும் சேனாதிபதி பரஞ்சோதியையுந்தான் சொல்கிறேன். அவர்கள் மௌனமாயிருந்தது எங்களுக்கு அர்த்தமாகவில்லை'' என்றார்.

''மாமல்லனும் பரஞ்சோதியும் ஏற்கெனவே எனக்கு அவ்வாறு வாக்களித்துச் சபதம் கூறியிருக்கிறார்கள். அதனாலேதான் இப்போது சும்மா இருந்தார்கள். அவர்கள் செய்த சபதத்தை நிறைவேற்றி வைக்க நீங்கள் அவர்களுக்கு ஒத்தாசை செய்ய வேண்டும். சபையோர்களே! நான் மாமல்லனோடு ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டியிருக்கிறது. அதனுடைய முடிவை உங்களுக்கும் நான் தெரிவித்தாக வேண்டும். சற்று எங்களுக்கு அவகாசம் கொடுப்பீர்களா?'' என்று கேட்டார்.

(தொடரும்)

# மின்சாரத்தில் கமிஷன் அடிக்கும் தஞ்சை நகராட்சி!



● சீனிவாச நாராயணசாமி



● மாரிமுத்து

தஞ்சை நகரின் தலையாய பிரச்னைகளில் ஒன்று மின்சாரம். ட்யூப்லைட் எரிந்தால் அது உங்கள் அதிர்ஷ்டம். மின்விசிறிகள் வேகமாகச் சுழல ஆரம்பித்தால் அது உங்கள் பூர்வ ஜன்ம புண்ணியம்! காரணம், வோல்டேஜ் பற்றாக்குறை. இத்தனைக்கும் மற்ற இடங்களில் உள்ளவர்களை விடத் தஞ்சை நகரில் உள்ளவர்கள் ஒவ்வொரு யூனிட்டுக்கும் அதிக மின்கட்டணம் செலுத்துகிறார்கள்!

இந்த அவல நிலைக்கு என்ன காரணம்?

''முழுக் காரணமும் தஞ்சை நகராட்சி தான்!'' என்று குற்றம் காட்டுகிறார் தஞ்சை மாவட்ட நுகர்வோர் நலக் கூட்டமைப்பின் தலைவர், பேராசிரியர் சீனிவாச நாராயணசாமி.

''மற்ற இடங்களிலெல்லாம் தமிழ்நாடு மின்சார வாரியமே உபயோகிப்பாளர்களுக்கு நேரடியாக மின்சாரம் வழங்குகிறது. ஆனால் தஞ்சையில் அப்படி யில்லை. மின்வாரியத்திடமிருந்து நகராட்சி வாங்கி, பிறகு அதை உபயோகிப்பாளருக்கு விற்கிறது. (கோவை, மதுரை, பொள்ளாச்சி, கரூர் நகரங்களிலும் இதே கதைதான்!) அதனால்தான் நாங்கள் நகராட்சிக்கு அதிகக் கட்டணம் செலுத்த வேண்டியிருக்கிறது!'' என்கிறார் அவர்.

''இதை உங்கள் நுகர்வோர் நலக் கூட்டமைப்பு எதிர்க்கவில்லையா?''

''சரியாகப் போயிற்று! நாங்கள் இதை எதிர்த்து எத்தனை போராட்டங்கள் நடத்தி விட்டோம் தெரியுமா? எம். ஜி. ஆர். முதல்வராக இருந்த போது, 'தமிழகம் முழுவதிலும் மின்சாரத்திற்கு ஒரே கட்டணம்தான் வசூலிக்கப்பட வேண்டும்' என்று அறிவித்தார். தஞ்சை நகராட்சி மட்டும் அதற்கு அசைந்து கொடுக்கவேயில்லை!''

''காரணம் என்ன?''

''இப்படி மின்சாரத்தை வாங்கி விற்பதால் நகராட்சிக்கு நல்ல லாபம் கிடைக்கிறது. அதனால்தான் மின்சாரம் வழங்கும் பொறுப்பை மின்வாரியத்திடமே ஒப்படைத்து விடுங்கள் என்றாலும் நகராட்சியினர் கேட்க மறுக்கிறார்கள். மக்களிடம் விற்பதை விட, நகராட்சிக்கு விற்பதில் மின்வாரியத்திற்கும் லாபம் என்பதால், மின்வாரியமும் எடுத்துக் கொள்ளத் தயங்குகிறது. இடையில் பாதிக்கப்படுவது மக்கள் தான்!'' என்கிறார் சீனிவாச நாராயணசாமி.

இதுபற்றி நகராட்சி என்ன சொல்கிறது? ''மின்வாரியத்தை விட நாங்கள் அதிகக் கட்டணம் வசூலிப்பது பற்றித்தான் சொல்கிறார்களே தவிர, எங்களது சர்வீஸ் எப்படி என்பதைச் சொல்கிறார்களா? எந்த இடத்தில் என்ன கோளாறு என்றாலும் எங்கள் நகராட்சி ஆட்கள் உடனடியாகச் சென்று சரிசெய்கிறார்கள். தாமதம் என்பதே கிடையாது. இது முக்கியமில்லையா?'' என்கிறார் நகராட்சி ஆணையாளர் மாரிமுத்து.

அதோடு, ''1.86 கோடி செலவில் புதிய பவர் ஸ்டேஷன் ஒன்றையும் நிர்மாணித்துள்ளோம். இருபது இடங்களில் புதிய டிரான்ஸ்ஃபார்மர்களை நிறுவியுள்ளோம். இதன் காரணமாக இன்னும் சில நாட்களில், வோல்ட்டேஜ் பிரச்னை என்பதே தஞ்சையில் இருக்காது!'' என்கிறார் ஆணையாளர்.

''தஞ்சை நகரத்திற்கான மின்சாரம் வழங்கும் பொறுப்பை மின்வாரியத்திடம் ஒப்படைப்பதில் நகராட்சிக்கு என்ன கஷ்டம்?''

''நாங்கள் தயாராக இருக்கிறோம். இது வரை மின்சார விநியோகத்திற்காக டிரான்ஸ்ஃபார்மர் போன்ற உபகரணங்கள் நிறுவ நகராட்சி செய்துள்ள செலவை, மின்வாரியம் தந்து விட்டால், உடனடியாக நாங்கள் ஒப்படைக்கத் தயார்!'' என்கிறார் ஆணையாளர்.

எது எப்படியோ, இதில் அரசு தலையிட்டு ஆவன செய்ய வேண்டும். இல்லையெனில், மாதம் ஒன்றுக்கு நூறு யூனிட்டுகளுக்குள் உபயோகிக்கிற ஒரு சாதாரணக் குடும்பத்தினர் மற்ற இடங்களில் யூனிட்டுக்கு 65 பைசா செலுத்திக் கொண்டிருக்கும் போது, தஞ்சை நகரத்தில் உள்ளவர்கள் ஒரு ரூபாய் செலுத்துகிற அவல நிலை நீடித்துக் கொண்டுதான் இருக்கும்.

– பிரின்ஸ்



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால், 1542-இல் ஸ்தாபிக்கப்பட்டு, தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 90 மாணாக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க, உணவு வகையினை அனுசரித்து சுமார், முறையே ரூ.300/- அல்லது 500/- ஆகிறது. இந்தத் தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 3000/- அல்லது 5000/- மூலதனம் ஏற்படுத்தியோ, அவ்வப்போது தொகை அனுப்பியோ, ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம். நன்கொடை அனுப்பவேண்டிய பெயரும் முகவரியும்:

**அத்வைத வித்யாசார்யா மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி,**
**D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,**
**கும்பகோணம்—612 001.**

****** இந்த நன்கொடைக்கு 80-G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு *****

## வேத வைதிக நூல்கள் (விலை தபால் செலவு உட்பட)

I
1. ரிக்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 10 மண்டலங்கள் - ரூ. 265/-
2. யஜுர்வேத ஸம்ஹிதா - நாகராக்ஷரம் - 7 காண்டங்கள் - ரூ. 165/-
3. ஸாமவேத ஸம்ஹிதா - க்ரந்தாக்ஷரம் - 2 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 165/-, இரண்டாம் பாகம் - ரூ. 210/-)
4. ஸாமவேத அஷ்டப்ராம்மணம் - நாகராக்ஷரம் - 3 பாகங்கள் (முதல் பாகம் - ரூ. 210/- இரண்டாம் பாகம் - ரூ. 110/- மூன்றாம் பாகம் - ரூ. 65/-
5. ஸாமவேத பூர்வாபர ப்ரயோகம் - க்ரந்தாக்ஷரம் - ரூ. 80/-

II **க்ரந்தாக்ஷரத்தில் காரிகையுடன் பிரம்மஸ்ரீ முத்துச்ரௌதிகளால் பதிப்பிக்கப்பட்ட க்ரந்தங்களின் மறுபதிப்புகள்**
1. போதாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 95/-
2. ஆபஸ்தம்ப பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 90/-
3. ஆபஸ்தம்ப ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 55/-
4. ஆச்வலாயன பூர்வாபர ப்ரயோகம் - ரூ. 85/-
5. ஆச்வலாயன ச்ராத்த ப்ரயோகம் - ரூ. 50/-
6. கல்ப சிந்தாமணி - ரூ. 55/-

III
1. மனாசேச்லோக - ராமமந்த்ராசே ச்லோக - ரூ. 25/- (மராத்தி மூலம் தமிழ் பதவுரை)
2. ஸ்ரீ ராதாக்ருஷ்ண பூஜாவிதானம் - ரூ. 25/- (ஸம்ஸ்க்ருதமூலம் - தமிழ் பதவுரை)
3. நளோதந்தம் - நைஷதகாவ்யத்தின் சுருக்கம் - ரூ. 25/- (ஸம்ஸ்க்ருத மூலம் - ஆங்கில பதவுரை)
4. வடமொழிச் சொற்கடல் - ஸம்ஸ்க்ருதம் - தமிழ் Dictionary ரூ. 60/-
5. வேதபாட வழிமுறை (syllabus) ரிக், யஜுர், ஸாம - ரூ. 25/-

V.P.P. யில் அனுப்புவதில்லை. முழுத்தொகையையும் M.O. (or) Draft மூலம் கீழே குறிப்பிட்டுள்ள முகவரிக்கு அனுப்பவும். செக் மூலம் அனுப்ப வேண்டாம்.

பிரஸிடெண்ட் & டிரஷரர் - A.V.M.S.G.D.P.S. சமிதி, D-76, மூன்றாவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர்காலனி, கும்பகோணம் - 612 001.

நேரில் வாங்க விரும்புவோர் கீழ்க்கண்ட விலாசத்தில் பெற்றுக் கொள்ளவும் ராஜா வேத காவ்ய பாடசாலை, யாகசாலை தெரு (சக்கரை படித்துறை அருகில்) கும்பகோணம் - 612 001.

அனந்தராமன் அலுவலகம் செல்லும் வழியில் மகிழ்ச்சிக்குரிய ஆச்சரியம்.

ஆ... அதோ அங்கே போகிறவள் ஈஸ்வரி மாதிரி இல்லை...? மாதிரியாவது... ஈஸ்வரியேதான்.

அதே நடை. நடையில் அந்தக் குழைவு. நயனங்களின் அமைதியான சுழல் வீச்சு. நீளப் பின்னலில் ஓரிரண்டு நரை தட்டினாலும் கருமையின் ஆதிக்கம் குறையாத அடர்ந்த கேசம். டிசம்பர் பூத்தேர் போல் வயலட் புடைவையில் இன்னும் கூட இளமையின் தேஜஸ்...

யாரோ இரண்டு பெண்மணிகளுடன் பேசிக் கொண்டே வந்தவள், அவனைக் கவனித்தாளா அல்லது அவனை அடையாளம் தெரியவில்லையா...

யோசிக்கவோ.. கூப்பிடவோ அவகாசமில்லாத நெருக்கடியான தருணம்...

வீதி முனையில் திரும்பி, குறுக்குச் சாலை வழியாக அந்த மேனிலைப் பள்ளியை நோக்கி நடந்தாள், அவள்.

பிளஸ் டூ பரீட்சைத் தாள்களைத் திருத்தும் மையங்களில் அந்தப் பள்ளியும் ஒன்று. கடந்த இரண்டு நாட்களாக ஆணும் பெண்ணும் கலந்த ஆசிரியர் குழாம் அணியணியாக அப் பள்ளியில் வந்து குவிந்து கொண்டிருந்தார்கள்.

அலுவலகம் செல்லும் வழியானதால் அதைக் கவனத்தில் கொண்டிருந்தான், அனந்தராமன்.

ஈஸ்வரியும் அதற்காகத்தான் வந்திருக்கிறாள்.

அடேயப்பா... எத்தனை காலமாகிறது அவளைப் பார்த்து. பள்ளி இறுதி வகுப்பில் பார்த்தது. இன்று அதே பள்ளியில் இறுதியாண்டு படிக்கும் பெண்ணுக்குத் தந்தையான பிறகு மீண்டும் அவளைப் பார்க்கிறான், அவன்.

# பழைய ரயில் பயணங்கள்

இடையில் இருபத்து மூன்று ஆண்டுகள். கிட்டத்தட்ட கால் நூற்றாண்டு.

திருத்துறைப்பூண்டி கான்வென்டில் ஈஸ்வரி படித்துக் கொண்டிருந்தாள். சொந்த ஊரில் அப்போது டைப்ரைடிங் இன்ஸ்டிடியூட் இல்லாததால், ஒரு மணி நேரப் பயிற்சிக்காக அவன் ரயில் சீசன் டிக்கெட்டில் திருத்துறைப்பூண்டிக்குப் போய்க் கொண்டிருந்தான்.



ரயிலில்தான் அவர்கள் முதல் சந்திப்பு.

அன்று பெண்கள் கம்பார்ட்மெண்டில் ஏகக் கூட்டம். அதில் இடம் கிடைக்காத ஈஸ்வரி, சிநேகிதிகளுடன் அனந்தராமன் இருந்த பெட்டியில் ஏறிக் கொண்டாள்.

ரயில் புறப்பட்டதும் வழக்கம் போல் அனந்தராமன் பாடினான். இன்ஸ்டிடியூட் சகா இளையபெருமாள், உட்காரும் பலகையில் தாளம் கொட்டினான்.

முதலாளியில் 'உன்னை நினைக்கையிலே - கண்ணே என்னைக் கனவுக்கு எண்ணிக்கை ஏதடி' என்ற பாட்டு.

இயற்கையிலேயே அனந்தராமனின் சாரீரம் மிகவும் இனிமையானது. இளம் பிராயத்தில் தினம் தினம் பாடிக் குரலை வளப்படுத்தி இருந்தான். ஆகவே அவன் த்வனி எல்லோரையும் எளிதில் வசப்படுத்திவிடும்.

ஈஸ்வரியும் அப்படித்தான் வசப்பட்டாள்.

''நன்றாகப் பாடுகிறாரடி.''

அவன் காது கேட்கட்டுமென்றே தோழிகளிடம் உ ர க் க ச் சொன்னாள், அவள்.

**தமிழினியன்**

கண்ணின் கடைப்பார்வை காதலியர் காட்டி விட்டால், மண்ணில் குமரர்க்கு மாமலையும் ஓர் கடுகாம்.

ஈஸ்வரியின் பாராட்டைக் கேட்டதும் அவனுக்குத் தலைகால் புரியவில்லை.

'அமுதைப் பொழியும் நிலவே... நீ அருகில் வராததேனோ' என்ற தங்கமலை ரகசியம்-

'உள்ளம் கொள்ளை போகுதே' என்ற நீலமலைத் திருடன் முதலிய பாடல்களைச் சரமாரியாகப் பாடினான், அவன்.

அன்றையிலிருந்து அவளைக் கண்டதும் அவனிடம் ஒரு நேக்கம். நீரோடையில் நடைபயிலும் தென்றல் காற்றாக ஒரு புன்னகை.

பின்னர், பெண்கள் பெட்டியில் இடமிருந்தாலும் ஈஸ்வரி அதில் ஏறுவது இல்லை. அனந்தராமன் இருக்கும் பெட்டி தேடி வந்து ஏறிக் கொள்வாள். அவன் பாட்டைக் கேட்க வேண்டுமே!



'அமுதைப் பொழியும் நிலவுதான்' அவளுக்கு மிகவும் பிடிக்கும். அது தவிர, வேறு பிரியமான பாட்டுக்குச் சீட்டு எழுதிக் கொடுப்பாள், அவ்வப்போது.

அச் சீட்டுக்களை எல்லாம் ஓர் ஆல்பம் போல் சேகரித்து வைத்திருந்தான், அனந்தராமன்.

அம்மா அவற்றைக் குப்பை என்று எண்ணிக் கூட்டித் தள்ளி விட்டாள், ஒரு நாள்.

அன்று முழுக்க அம்மாவுடன் கோபித்துக் கொண்டு சாப்பிடக் கூட இல்லை, அவன்.

ஈஸ்வரியிடம் அதைச் சொன்ன போது, ''அதற்காகவா அம்மாவைக் கோபித்துக் கொண்டீர்கள். இது டூ மச்'' என்று செல்லமாய்க் கோபித்துக் கொண்டாள், அவள்.

நாட்கள் இப்படி நாயனத் தோரணமாய் நகர்ந்தன. அவன் டைப்-ரைடிங் முடித்தான். சர்வீஸ் கமிஷன் எழுதினான்.

அவள் பதினொன்றாம் வகுப்பு பொதுத் தேர்வு எழுதினாள். வீசில் போனாள்.

அன்று போனவள்தான்.

இடையில் யாரோ அவள் செகண்டரி கிரேடு ஆசிரியையாகப் பணிபுரிகிறாள் என்று சொன்னார்கள்.

அதன் பிறகு இன்றைக்குத்தான் அவளைப் பார்க்கிறான்.

காதலின் நிமிடங்கள் கற்கண்டிலும் சுவையானவை. அதிலும் பிரிந்து சேரும் போது பிறக்கின்ற சுகம், சொர்க்கத்தை விட மேலானது.

அலுவலகம் வந்த அனந்தராமன் அதை அனுபவபூர்வமாக உணர்ந்தான். இருப்புக் கொள்ளாத அவன் உதடுகளில் ஈஸ்வரியின் நாமாவளி. அவளுக்குப் பிடித்தமான பாடல்களை எல்லாம் 'ஹம்மிங்' செய்து கொண்டான்.

திடீரென்று பிரிந்தவள் இன்று திடீரென்று தோன்றி இருக்கிறாள். அவளுக்கு நினைவுச் சின்னமாய் ஏதாவது ஒன்று கொடுக்க வேண்டும். ஸ்ரீரங்கத்துக்கு அழைத்துப் போய் பெருமாளைச் சேவித்து விட்டு, காவேரி மணலில்...

அவளுக்கு என்ன வாங்கித் தரலாம்?

யோசித்தான்.

அவளுக்குப் பிடித்தமான பாடல் 'அமுதைப் பொழியும் நிலவே...'

அப் பாடல் பதிவான கேசட் வாங்கிக் கொடுக்கலாமா! ஆம். அதுதான் பொருத்தமான பரிசு.

ஓடினான் கடை வீதிக்கு.

“சார்... ஈஸ்வரி டீச்சரைப் பார்க்க வேண்டும்.''

பள்ளிக்கூட காம்பவுண்டை ஒட்டிப் பேசிக் கொண்டிருந்த ஆசிரியர்களிடம் முறையிட்ட இரண்டாவது நிமிடம் -

அவள்...

ஈஸ்வரி, தனக்கே உரிய தளிர்நடையில், சிவந்த கன்னங்களில் சின்னதாய்ச் சிரிப்புக் குமிழி படர மெள்ள நடந்து வந்தாள்.

''வா ஈஸ்வரி... சௌக்கியமா?''

''சௌக்கியம்தான். நீங்கள்?''

''நன்றாய் இருக்கிறேன்.''

வீட்டில் மனைவி குழந்தைகள் எல்



☛ ஓலைச் சுவடிகளுக்குத் தனிக் கவனம்

## கர்நாடக இசைக்குப் பெயர் வந்த கதை!

**க**ர்நாடக சங்கீதத்துக்கு எப்படி அந்தப் பெயர் வந்தது? முன்பு சென்னை ராஜதானியாக இருந்த பகுதிக்குக் கர்நாடிக் (carnatic) என்று பெயர். 'A map of Hindoostan' என்ற பெயரில் 1788-ல் ரென்னல் கம்பெனி வெளியிட்டுள்ள வரைபடத்தில் அப்படித்தான் குறிக்கப்பட்டிருக்கிறது. 'கர்நாடிக்' பகுதியில்தான் சங்கீத மும்மூர்த்திகளும் வாழ்ந்தார்கள் என்பதால் அவர்கள் வளர்த்த இசைக்கும் கர்நாடக இசை என்று பெயர் ஏற்பட்டு விட்டது.

இதுபோல் ஏராளமான தகவல்கள் தஞ்சையிலுள்ள சரஸ்வதி மகாலில் இருக்கின்றன. சரபோஜி மன்னர் சேகரித்து வைத்த ஆயிரக்கணக்கான புத்தகங்களும் ஓலைச் சுவடிகளும் காணக் கிடைக்காத பெயிண்டிங்குகளும் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. ஓலைச் சுவடிகளிலுள்ள சில அரிய விஷயங்களை அவ்வப்போது புத்தகங்களாகவும் வெளியிட்டு வருகிறார்கள். இன்னும் சுறுசுறுப்புடன் வெளியிட்டால் ஏராளமான அரிய விஷயங்கள் மக்களுக்குக் கிடைக்கும்.

லோரும் நலம்தானே?'' அக்கறையுடன் விசாரித்தாள், அவள்.

''ஓ... காலையில் உன்னைப் பார்த்ததும் நான் அப்படியே திகைத்துப் போய் விட்டேன், ஈஸ்வரி. அடேயப்பா... எத்தனை வருஷமாகி விட்டது, பார்த்து. ஆபீசுக்குப் போனதிலிருந்து உன் ஞாபகம் தான். ரயிலில் போன பழைய சம்பவங்கள் எல்லாம் ஒன்று விடாமல் நினைவுக்கு வந்து விட்டன உனக்கு...?''

''எனக்கு அதெல்லாம் ஒன்று கூட ஞாபகம் வரவில்லை.''

''ஏன்... மறந்து விட்டாயா?''

''ஞாபகப்படுத்தத் தேவை இல்லாத விஷயமென்று விட்டு விட்டேன். சரி... நான் வரட்டுமா. எனக்கு நிறைய வேலை இருக்கிறது.''

''என்ன ஈஸ்வரி, இப்படி ஓடுகிறாய். இருபத்தி மூன்று வருஷங்களுக்குப் பிறகு சந்திக்கிறோம். எவ்வளவோ பேசணும் என்று வந்தேன் தெரியுமா?'' அவன் அவளைப் பரிதவிப்புடன் நோக்கினான்.

''நானும்தான் உங்களோடு நிறையப் பேச வேண்டுமென்று இருந்தேன். ஆனால் இப்போது... உங்களோடு பேச எனக்குப் பிடிக்கவில்லை.''

நிலைகுலைந்தான், அவன். ''பிடிக்கலையா... ஏன்?''

''ஆரம்ப காலத்தில் நாம் எத்தனையோ கனவுகளோடு பழகி இருக்கலாம். அதெல்லாம் செத்துப் போன விஷயங்கள். இப்போது நீங்கள் யாரோ ஒரு புண்ணியவதியின் கணவன். காலையில் நான் உங்களைப் பார்த்த போது அப்படித்தான் நினைத்தேன். அதே போல் நான் ஆத்மார்த்த மான ஒரு புருஷனின் மனைவி என்ற எண்ணம் உங்களுக்கும் வந்திருக்க வேண்டும். அந்த எண்ணம் உங்களுக்கு இருந்திருந்தால் என் குடும்பத்தைப் பற்றி விசாரித்திருப்பீர்கள். அப்பழுக்கில்லாமல் நம் பேச்சு நீண்ட நெடுங்கதையாய்த் தொடர்ந்திருக்கும்.

''ஆனால் அதை விட்டு விட்டு, பழைய ரயில் பயணங்களோடு வந்திருக்கிறீர்களே நீங்கள்... இது சரிதானா...? அதைப் பற்றி நாம் இப்போது பேசுவது உங்கள் மனைவிக்கும், என் கணவருக்கும் செய்யும் துரோகமாகாதா...''

அனந்தராமன் பதில் பேசப் புரியாமல் தவித்தான். அவனுக்குத் தொண்டை வறண்டது.

அப்போது, உள்ளே இருந்து ஒரு பெண்மணி வந்தாள்.

''ஈஸ்வரி... யார் இவர்?''

''யாரோ தெரியவில்லை. அவர் தேடி வந்த ஈஸ்வரி நான் இல்லை. வா, போகலாம்.''

ஈஸ்வரி, திரும்பி நடந்தாள்.

அதே அமைதி... அதே வாசம்...

## அருள்வாக்கு



ஏழையோ, பணக்காரனோ எல்லார் குடும்பத்திலும் கல்யாணம் மாதிரியான சுபகாரியங்கள், சாவு மாதிரியான அசுபகாரியங்கள் வருகின்றன. இவற்றுக்காக எவனும் கடன்படுகிற மாதிரி நாம் விட்டால் அது நமக்குப் பெரிய தோஷம். அவரவரும் தன்னாலானதை ஐந்தோ, பத்தோ ஏழைப்பட்ட பந்துக்களின் சுபாசுபகாரியங்களுக்கு உதவ வேண்டியது ஒரு பெரிய கடமை. இதை முன்காலங்களிலெல்லாம் வழக்கமாகச் செய்து வந்தார்கள். 'பரோபகாரம்' என்று யாரோ மூன்றாம் மனிதர்களுக்குச் செய்வதற்கு முன்னால், 'பந்துத்வ'த்தோடு நம்முடைய ஏழைப்பட்ட உறவினர்களுக்கு உதவி செய்ய வேண்டும். இரண்டு தலைமுறைக்கு முந்தி, இதைச் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை.

அப்போது 'கிழவர் பராமரிப்பு இல்லம்', 'விதவை விடுதி' என்றெல்லாம் வைக்க வேண்டிய அவசியமே இல்லாதிருந்ததற்கு என்ன காரணம்? பந்துக்களே இவர்களைப் பராமரித்து வந்ததுதான். அநேகமாக எல்லா வீடுகளிலும் ஒரு அத்தை பாட்டி, மூன்று தலைமுறை விட்டு ஒரு மாமா தாத்தா என்கிற மாதிரி கிழங்கள் இருக்கும். தற்காலத்தில் ரொம்பவும் பணக்காரர்களும் கூட வெறும் 'ஷோ'வாக பார்ட்டியும், ஃபீஸ்டும் கொடுக்கிறார்கள்; அல்லது பேப்பரில் போடுகிற மாதிரி டொனேஷன் கொடுக்கிறார்கள்; ஆனால் பந்துத்வத்தோடு தங்கள் குடும்பத்திலேயே வசதி இல்லாதவர்களை ஸம்ரக்ஷிப்பது என்பது இப்போது அநேகமாகப் போயே போய் விட்டது.

முதலில் ஏழையான பந்துக்களைக் கவனிக்க வேண்டும். சுபாசுபகாரியங்களுக்கு நாம் செலவழித்துக் கொண்டு தேசிம் போக வேண்டும் என்பது கூட இல்லை. இந்தச் செலவையும் சேர்த்து அந்த வசதி இல்லாத உறவுக்காரனுக்கு அனுப்பி வைத்தால், அவனுக்கு எத்தனையோ உதவியாக இருக்கும்.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

# பால் கார்டு

என் நண்பன் கணேஷ் உடனடியாக வீடு மாற வேண்டிய சூழ்நிலையில் இருந்தான்.

வீட்டின் சொந்தக்காரருக்கும், கணேஷுக்கும் ஏனோ ஒத்துப் போகவில்லை.

''காலி பண்ணிடு'' என்றார் வீட்டுக்காரர்.

பல புரோக்கர்களைப் பார்த்தும் லோ லோவென அலைந்தும் ஊஹும்...

கடைசியாக என் வீட்டருகே புதிதாகக் கட்டிக் கொண்டிருக்கும் ஒரு பிளாட் ஓனரைப் பார்த்து நைச்சியமாகப் பேசி, ஒரு போர்ஷனை பிடித்துக் கொடுத்தேன் நான்.

''ரொம்ப தாங்ஸ்டா ராஜா... ஐயய்யோ வீடு வாடகைக்குக் கிடைக்கிறது இவ்வளவு பாடா இருக்கே'' என்றான்.

''அதனால் என்னடா... ஒருத்தருக் கொருத்தர் உதவாட்டி எப்படி?''

''எனக்கு இன்னொரு பிரச்னை.''

''என்னடா சொல்லு...''

''நான் நாளைக்கு பம்பாய் டூர் போகணும். வர எப்படியும் ஒரு வாரமாகும். அதுக்குள்ளே பால் கார்டு மாத்தியாகணும் இந்த ஏரியாவுக்கு.''

''இது என்ன பெரிய விஷயம்?''

''என் மனைவி அவங்க அப்பா வீட்டுக்குப் போய் உதவி கேட்கணும். அவரும் வயதானவர்...''

''இதில் என்னடா தயக்கம்... நான் இல்லை. என்கிட்டே கார்டு கொடுடா.. நான் பால் கார்டு வாங்கற போது உனக்கும் வாங்கிடறேன். நானும் நீயும் ஒரே தெருவில்தானே இருக்கோம். ஒரே பூத்தானே! ஒரு விண்ணப்பம் மட்டும் எழுதிக் கொடுடா. நான் இந்த நம்பர் உள்ள பூத்தில் பால் வாங்கிக் கொண்டிருந்தேன்...... இப்போது இந்த இடத்துக்கு வீடு மாறியதால் இத்தனாம் எண் உள்ள பூத்தில் இனி பால் வழங்குமாறு கேட்டுக் கொள்கிறேன் என்று...''

''சரிடா'' என்று எழுதிக் கொடுத்தான். நண்பன் பம்பாய் போய் விட்டான்.

நானும் அந்த வாரக் கடைசியில் போய்ப் பூத்தில் காட்டி, புது கார்டு வாங்கி விடுவது என்று பேசாமல் இருந்து விட்டேன், அசிரத்தையாக!

சனிக் கிழமையன்று நண்பன் கொடுத்த விண்ணப்பத்துடன் பணத்தையும் எடுத்துக் கொண்டு பூத்துக்குப் போய்க் கேட்டேன்.

பூத்தில் இருந்தவர் ''இதை இங்கு கொடுக்க முடியாது; பக்கத்துத் தெருவில் உள்ள பால் வழங்கும் அலுவலகம் கொண்டு போய்க் கொடுங்கள்'' என்றார்.

அடுத்த தெருவுக்குப் போன போது, அங்கு செயல்பட்டு வந்த பால் வழங்கும் அலுவலகத்தினை வேறு ஏதோ தெருவுக்கு மாற்றி விட்டதாகச் சொன்னார்கள்.

மிகுந்த சிரமப்பட்டு அலுவலகத்தைத் தேடி விண்ணப்பம் கொடுத்த போது, ''என்ன சார் இது. உங்களுக்கு புரொஸிஜரே தெரியாதா?'' என்றார்கள்.

''தெரியாது சார் சொல்லுங்க.''

''இதுபோல் விண்ணப்பத்தை மட்டும் வச்சுக்கிட்டு பால் பூத்தை மாற்றி விட முடியாது.''

''பின்னே என்ன செய்யணும்?''

''முன்னே எங்கே பால் வாங்கிக்கிட்டிருந்தீங்களோ அதனுடைய அலுவலகத்துக்குப் போய் அவங்ககிட்ட விண்ணப்பத்தைக் கொடுங்க. அவங்க உங்க விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டு ட்ரான்ஸ்ஃபர் ஆர்டர் போட்டுக் கொடுப்பாங்க'' என்றனர்.

நண்பன் முன்பு எங்கு பால் வாங்கிக் கொண்டிருந்தானோ அந்த பூத்தை அணுகி, அதனுடைய கிளை அலுவலகம் எங்கே இருக்கிறது என்று கேட்டேன். ''சைதாப்பேட்டையில் ஜோன்ஸ் ரோடு போங்க'' என்றனர்.

காலையிலிருந்து வெயிலில் அலைந்து விட்டதால் வீடு திரும்பி ஓய்வெடுத்துக் கொண்டேன். சரி மறுநாள் காலையில் வெயிலுக்கு முன் போய் விண்ணப்பத்தைக் கொடுத்து மாற்றல் உத்தரவு வாங்கி,



உடனடியாக நான் குடியிருக்கும் பூத் எந்தக் கிளை அலுவலகத்தில் வருகிறதோ, அங்கே போய் பால் கார்டு வாங்கி விடலாம் என்று நினைத்திருந்தேன்.

**ம**றுநாள் என் லொட லொடா சைக்கிளில், நண்பன் முன்பு குடியிருந்த பால் பூத்துக்கு எது அலுவலகம் என்று விசாரித்துக் கொண்டு போனேன் விண்ணப்பத்தோடு.

நிறையப் பேர் கூட்டமாய்க் கார்டு வாங்கிக் கொண்டிருந்தனர்.

அந்த அலுவலகத்தின் மேலாளரை அணுகி விண்ணப்பத்தைக் கொடுத்தேன்.

''என்ன சார் காலங்கார்த்தால வந்துட்டீங்களே... இப்ப எவ்வளவு கூட்டம்...'' என்றார். தொடர்ந்து, ''இப்போ முடியாது. இப்போ புது பால் கார்டுகள் வழங்கியாகணும். டிரான்ஸ்ஃபர் எல்லாம் மதியம் தான். மதியம் மூணு மணிக்கு மேல் வாங்க...'' என்றார்.

''சார் நான் ரொம்ப தூரத்திலிருந்து வரேன். கொஞ்சம் தயவு பண்ணி...''

''முடியாது சார். தொந்திரவு பண்ணாதீங்க. போயிட்டு மத்தியானம் மூன்று மணிக்கு வாங்க'' என்று சொல்லி விட்டு வேறு பக்கம் திரும்பிக் கொண்டார்.

வியர்க்க, விறுவிறுக்க வீடு திரும்பிச் சாப்பிட்டு விட்டு, வேலைகளை முடித்துக் கொண்டு மதியம் மூன்று மணிக்குப் போனேன்.

அச்சடித்த ஒரு விண்ணப்ப பாரம் வைத்திருந்தார்கள்.

அதில் பெயர், விலாசம், பூத் எண், எதிலிருந்து எதற்கு மாற்றம் கோரப்படுகிறது என்று எழுதி பால் கார்டு மேல் 'ட்ரான்ஸ்ஃபர்' என்று எழுதி என் கையில் கொடுத்தார்கள். இதற்கே அரை மணி நேரம் ஆயிற்று.

மறுநாள் அலுவலகம் போகாமல் விடுப்பு எழுதிக் கொடுத்து விட்டு என் தெருவில் இருக்கும் பூத்துக்கான கிளை அலுவலகத்தை இந்த மாற்றல் உத்தரவுடன் அணுகினேன்.

அவர்கள், ''இந்த விண்ணப்பத்தையும் உங்கள் பழைய பால் கார்டுகளையும் எடுத்துக் கொண்டு, எங்கள் வட்டார பால் வழங்கும் அலுவலகத்துக்குப் போங்கள். அங்குள்ள அதிகாரி இந்த விண்ணப்பத்தின் மீது உத்தரவு போட வேண்டும்.... அதாவது இந்த எண் பூத்தில் இன்னார் இனி பால் வாங்கிக் கொள்ள அனுமதிக்கப்படுகிறார் என்று...'' என்றார்.

கௌசல்யா ரங்கநாதன்



மறுபடி வட்டார பால் வழங்கு அலுவலகம் எங்கு உள்ளது என்று விசாரித்துப் போய் அந்த அதிகாரியிடம் விண்ணப்பத்தில் உத்தரவு பெற்றுக் கொண்டு, மறுபடி பால் கார்டுக்கான அட்டை வழங்கும் அலுவலகத்திற்கு வந்தேன்.

அங்குள்ள நபர் அந்த விண்ணப்பத்தை வாங்கி வைத்துக் கொண்டு, ''உங்கள் எண்... இதுதான். நாளை மறுநாள் வாருங்கள்'' என்றார்.

''எதற்கு.. அதான் உத்தரவு வாங்கிக் கொண்டு வந்து விட்டேனே... பணம் கொடுக்கிறேன். புதிய பால் கார்டுக்கான அட்டை வழங்க வேண்டியதுதானே'' என்றேன் கடுப்பாய்.

''சாருக்கு புரொஸீஜர் தெரியலை... அதான் கோபிக்கிறீங்க... இது மாதிரி மாற்றல் கோரி வரும் விண்ணப்பங்களையெல்லாம் நெறிப்படுத்தி, வரிசை எண்கள் போட்டு, ஒருநாள் எங்கள் வட்டார பால் வழங்கும் அதிகாரிகிட்டே எடுத்துக்கிட்டுப் போய் அவர் அதில் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கணும். அப்புறம்தான் புதிய பால் கார்டு கொடுப்போம். நல்ல வேளையா இன்னைக்கு வந்தீங்க. இன்னையோட இந்த மாச மாற்றல் கோட்டா முடியுது. இன்னைய வரை சேர்ந்த விண்ணப்பங்களை நாளைக்கு எடுத்துக்கிட்டுப் போய் உத்தரவு வாங்கி வந்து நாளன்னைக்குப் புது கார்டுகள் வழங்குவோம்...'' என்றார்.

எனக்குத் தலை சுற்றியது...

# தமிழ்ப் பல்கலைக்கழகம் என்ன செய்து கொண்டிருக்கிறது?

'முதன் முதலில் அச்சடிக்கப்பட்ட தமிழ்ப் புத்தகம் பைபிள். தரங்கம்பாடியில் நிறுவப்பட்ட அச்சுக் கூடத்தில் அப் புத்தகம் 1706-ல் அச்சடிக்கப்பட்டது.' இது தான் இதுவரை நாம் நம்பிக் கொண் டிருக்கும் செய்தி.

ஆனால், ''உண்மை அ து வ ல் ல; 'தம்பிரான் வணக்கம்' என்ற புத்தகம்தான் முதன் முதலில் அச்சடிக்கப்பட்ட தமிழ்ப் புத்தகம். இது கோவாவில் அச்சடிக்கப்பட் டது. ஆண்டு, 1578. இந்தப் புத்தகத்தின் ஒரு பிரதி அமெரிக்காவிலுள்ள ஹார்வார்ட் பல் கலைக் கழகத்திலிருக்கும் ஹ'டன் நூல கத்தில் இன்றைக்கும் இருக்கிறது. அதன் புகைப்படப் பிரதியொன்று எங்கள் நூல கத்திலும் இருக்கிறது...'' என்று காட்டுகி றார், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தி லுள்ள நூ ல க த் தி ன் இயக்குனர் டி. பத்மநாபன்.

''இதே போல் முதல் நடமாடும் நூலகம் எப்படியிருந் தது தெரியுமா?'' என்ற பத்மநாபன், நம்மிடம் ஒரு புகைப்படத் தைக் காண்பித்தார். அது ஒரு இரட்டை மாட்டு வண்டி. 1927-லேயே மன்னார் குடி எஸ்.வி. கனக சபை பிள்ளை என்பவர் அதை நடத்தி யிருக்கிறார். அது வியாபார நோக்கில் நடத்தப்பட்டதல்ல. 'வாலிபர் கல்வி' (இப் போதைய முதியோர் கல்வி)க்காக நடத்தப் பட்டது. அப்போது மக்களுக்கு வழங்கப் பட்ட புத்தகங்களின் பிரதிகளும் தமிழ்ப் பல்கலைக் கழக நூலகத்தில் இருக்கின்றன. அந்த இரட்டை மாட்டு வண்டி கூட இருக் கிறது!

தஞ்சை மன்னன் சரபோஜி, தமது ராஜ்ஜியத்தைக் கிழக்கிந்தியக் கம்பெனி யாரிடம் எப்படி இழந்தார் என்பதற்கான ஆதாரங்களும் மிகவும் சுவாரஸ்யமா னவை!

மராத்திய மன்னன் துளஜாஜிக்குக் குழந்தைச் செல்வம் இல்லாததால், சரபோஜியைத் தத்தெடுக்கிறார். துளஜாஜி இறந்த பிறகு, அவரது தம்பி அமிர்சிங், இந்து மதச் சம்பிரதாயங்களின்படி



☛ தமிழ்ப் பல்கலைக் கழகம்

சரபோஜியைத் தமது அண்ணன் தத்தெடுத்தது செல்லாது என்கிறார். விசாரிக்க வருகிறார்கள் ஆங்கிலேயர்கள். சம்பிரதாயங்களை ஆராய்ந்த பன்னிரண்டு பண்டிதர்கள், துளஜாஜி தத்தெடுத்தது செல்லாது என்று தீர்ப்பு வழங்குகிறார்கள்.

அதன்படியே, ஆங்கிலேயர்கள் அமிர்சிங்கிடம் அரசுப் பொறுப்பை ஒப்படைத்து, ஆண்டுக்கு எண்பதாயிரம் பாகோடாக்கள் (ஒரு பாகோடா என்பது மூன்றரை ரூபாய்க்குச் சமம்) கப்பம் கட்டுமாறு சொல்கிறார்கள். அமிர்சிங்கால் கட்ட முடியவில்லை. எனவே, அதற்கு ஈடாக மன்னார்குடியையும் மாயவரத்தையும் ஆங்கிலேயரிடம் அடகு வைக்கிறார் அவர்.

இதற்கிடையில் கிறிஸ்துவப் பாதிரியார் ஷ்வார்ட்ஸ் (Schwartz) என்பவர், மன்னன் துளஜாஜி, சரபோஜியைத் தத்தெடுத்தது செல்லாது என்று அறிவித்த பன்னிரண்டு பண்டிதர்களும் அமிர்சிங்கிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டதால்தான் அப்படியொரு பொய்யான முடிவைச் சொல்லியிருக்கிறார்கள் என்றும், அதோடு அமிர்சிங்கே ஒரு சட்டவிரோதமான குழந்தை (illegitimate affspring) என்று கண்டு பிடித்துச் சொல்கிறார்! அதன் பிறகுதான் சரபோஜி மன்னராகிறார்!

இந்தக் காலகட்டத்திற்குள் ஆங்கிலேயருக்கு அமிர்சிங் கட்ட வேண்டிய கப்பத் தொகை பதின்மூன்று லட்சம் பாகோடாக்களாகி விடுகிறது. ஆங்கிலேயர்கள் 'பெரிய மனசு' பண்ணி அதைப் பத்து லட்சம் பாகோடாக்களாகக் குறைத்தும், கப்பத் தொகையைக் கட்ட இயலாமல் போக, ஆட்சிக்கு வந்த பதினாறு மாதங்களிலேயே தஞ்சை அரசை ஓர் ஒப்பந்தத்தின் மூலம் ஆங்கிலேயருக்குத் தாரை வார்த்துத் தர வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார் சரபோஜி மன்னர்!

''இதுபோல் இன்னும் ஏராளமான சரித்திர ஆதாரங்கள் எங்கள் நூலகத்தில் இருக்கின்றன. 1900-ஆம் ஆண்டுக்கு முன்னதாகவுள்ள ஏராளமான சரித்திர ஆவணங்களை ஆங்கிலேயர்கள் கொண்டு போய் விட்டார்கள். அவை எல்லாவற்றையும் நாம் சேகரித்தால்தான் உண்மையான சரித்திரம் நமக்குக் கிடைக்கும்!'' என்கிறார் பத்மநாபன்.



முதல் நடமாடும் நூலகம்



துணைவேந்தர் சி. பாலசுப்பிரமணியம்

இப்படி உண்மையான தகவல்களை ஆதாரங்களோடு அறிந்து கொள்ள ஆசைப்படும் எல்லாத் துறை ஆராய்ச்சியாளர்களுக்கும் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழக நூலகம் மிகவும் உதவி கரமாக இருக்கிறது என்றால், தமிழ்ப் பல்கலைக் கழகம் என்ன செய்கிறது?

''எல்லா நிலைகளிலும் தமிழ் மொழியைப் பயிற்று மொழியாகவும், வளர்ந்து வரும் மருத்துவம், அறிவியல், தொழில்நுட்பம் போன்ற எல்லாவற்றையும் வெளிப்படுத்தும் மொழியாகவும் தமிழை ஆக்குவது. சுருக்கமாகச் சொன்னால் தமிழ்க் கல்வியை மேம்படுத்துவதும், தமிழ் ஆராய்ச்சியை வளப்படுத்துவதும்தான் இதன் தலையாய பணி''





''இவள் ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த' என்னுடைய பெண் ஃப்ரெண்ட் மிஸஸ் கிளாடியா. வடாம் வைக்கும் கலையைக் கத்துக்க வந்திருக்கா!''

என்கிறார் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் சி. பாலசுப்ரமணியம்.

இதற்காகவே இலக்கியம், மொழி பெயர்ப்பு, சிற்பம், ஓவியம், இசை, நாடகம், ஓலைச் சுவடி, கல்வெட்டு, கட்டடக் கலை, சித்த மருத்துவம் என்று மொத்தம் இருபத்து மூன்று துறைகள் இப் பல்கலைக் கழகத்தில் இயங்குகின்றன. எல்லாத் துறைகளும் தத்தமது துறை பற்றிய ஏராள விஷயங்களைத் தமிழில் புத்தகங்களாக வெளியிடுகின்றன.

''இந்தப் புத்தகங்களைப் படிப்பதன் மூலம், தமிழில் இலக்கியங்களைத் தவிர, படிப்பதற்கு அப்படி என்ன இருக்கிறது என்ற நிலை தலைகீழாக மாறிப் போகும்; தமிழ் மட்டுமே அறிந்த ஒருவர், இனி எல்லாத் துறைகளையும் தமிழிலேயே படித்தறியும் வாய்ப்புக் கிட்டும்'' என்கிறார் துணைவேந்தர்.

''உண்மையிலேயே அற்புதமான விஷயம்தான். ஆனால், தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியிடும் புத்தகங்களெல்லாமே நூற்றுக்கணக்கில் விலையுடையவவாக இருக்கும் போது, அவை எப்படிச் சாதாரண மக்களால் வாங்கப்படுபவையாக இருக்க முடியும்?''

''உண்மைதான். எப்படியோ அந்த விஷயத்தில் தவறு நடந்து விட்டது. அதனால்தான் பழைய புத்தகங்களை ஐம்பது சதத் தள்ளுபடி அளவுக்குக் கூட இப்போது விற்றுக் கொண்டிருக்கிறோம். இனி அனைவரும் வாங்கும்படியான மலிவுப் பதிப்புப் புத்தகங்களை வெளியிடுவதாகவும் முடிவு செய்திருக்கிறோம்!'' என்கிறார் துணை வேந்தர் சி. பாலசுப்ரமணியம்.

- சாங்கிருத்தியாயன்

---

## மாதம் ஒரு நகரம்

# கடலூர் வாசிகளே கவனியுங்கள்



'மாதம் ஒரு நகரம்' என்ற கல்கியின் சமுதாய நலத்திட்டத்தின் ஏழாவது நகரமாகக் கடலூர் நகரத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

மே முதல் வாரத்தில் கடலூரிலுள்ள குறை நிறைகளை நேரில் பார்த்து அலசப் போகிறோம்.

எனவே, கடலூரிலுள்ள அனைவரும் - தங்கள் பகுதியிலுள்ள குறை நிறைகள், அரசின் சாதனைகள், அதிகாரிகளின் மெத்தனங்கள், தனி மனிதர் சாதனைகள் மற்றும் பல்வேறு இளைஞர் அமைப்புகளின் செயல்பாடுகள்... என்று பல்வேறு விஷயங்களையும் எங்களுக்குச் சுருக்கமாக எழுதியனுப்ப வேண்டுகிறோம்.

கடலூர் வாசிகளான உங்கள் கடிதங்கள், கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 7.5.92.

குறுகிய நாட்களே இருப்பதால் உடனடியாக எழுதியனுப்ப வேண்டுகிறோம். உறையின் மேல் தவறாமல் 'மாதம் ஒரு நகரம் - கடலூர்' என்று குறிப்பிடுங்கள்.

- ஆசிரியர்

நீங்க நேத்து மாட்ச் பார்க்கலியா...
அதுல முக்கியமா பார்த்திருக்க வேண்டியது இதுதான் !

'என் தோக்க மாட்டோம் !
ரெஃப்ரீ அவங்க பக்கயில்லே இருந்தாரு !'

VIP Brat®

7 முதல் 12 வயதுள்ள
குட்டி வீரர்களுக்கு.

Avenues HH 1287 92

அதிக பயன்! அதிக பலன்!

இலவசம்!

Velvette

ரூ 1/- மதிப்புள்ள ஒரு
வெல்வெட் ஷாம்பூ பாக்கெட்
ஒவ்வொரு 300 கிராம்
டோட்டல் பாருடன்

Total
BLUE DETERGENT BAR

ரூ 2/- மதிப்புள்ள இரு
வெல்வெட் ஷாம்பூ பாக்கெட்
ஒவ்வொரு 500 கிராம்
டோட்டல் பாருடன்

Velvette

Total
BLUE DETERGENT BAR
500 gms
Rs. 9.25 only

இச்சலுகை சரக்கு
உள்ளவரை மட்டுமே.

A product of MSIL

"கற்பகம்... சீக்கிரம் காப்பி கொண்டா. ஸ்கூலுக்கு நேர மாச்சு... இன்றைக்கு யூனியன் ஆபீசுக்கு கலெக்டர் விசிட். ஸ்கூலுக்கும் வருவார்னு பேசிக்கிறாங்க..." என்ற ஆசிரியர் பழனிச்சாமி அவசரமாய்த் தமது பழைய சைக்கிளை திண்ணையில் இருந்து இறக்கி முற்றத்தில் வைத்தார்.

"ஒரு நிமிஷம்... காப்பிப் பொடி சரியாப் போச்சு... பக்கத்து வீட்டு மாமி கிட்டே ஒரு கரண்டி வாங்கிட்டு வந்துடறேன்" என்றபடி படி இறங்கினாள் கற்பகம்.

"வேண்டாம் கற்பகம்... இப்பவே லேட்டாயிட்டுது..." என்று தடுத்த பழனிச்சாமி, மனைவி கொடுத்த மோர்ச் சாத டப்பாவை ஒரு மஞ்சள் துணிப் பையில் வைத்து ஹேண்ட் பாரில் மாட்டினார்.

"இந்தாங்க... இதுல பத்து ரூபா இருக்கு... ஸ்கூல் விட்டு வரும் போது நூறு காப்பித் தூளும்... அரைக் கிலோ சீனியும் வாங்கிட்டு வந்துடுங்க..."

அஞ்சறைப் பெட்டியில் இருந்த சில்லறைக் காசுகளைப் பொறுக்கி எடுத்து வந்து நீட்டினாள் கற்பகம்.

"சரி... வரட்டுமா?"

மனைவியின் பதிலுக்குக் கூட நிற்காமல் பணத்தை வாங்கிப் பையில் போட்டுக் கொண்டு அவசரமாய் சைக்கிளில் ஏறினார்.

எதிர் வெயில் கரீர் என்று முகத்தில் அடித்தது.

**கா**ப்பி குடிக்காத களைப்புடன்... இந்த ஜம்பத்தேழு வருஷத்து ஆசிரியர் பணியின் களைப்பும் சேர்ந்தது. அவரைப் போலவே அதிக காலம் பணியாற்றி ரிட்டையர் மெண்டுக்கு காத்திருக்கும் சைக்கிளும் களைத்துச் சோர்ந்து இருந்தது. வண்டி வேகம் காட்ட மறுத்தது.

அவசரமாய்க் கடிகாரத்தைப் பார்த்தார்.

ஒன்பது பத்து...

"இன்னும் இருபது நிமிடம் இருக்கிறது... காலைப் பிரேயருக்குள் போயிடலாம்" மனசிற்குள் சொல்லிக் கொண்டார்.

'இதுவரை - இத்தனை வருட சர்வீஸில் ஒருமுறை கூட லேட் ஆகப் போனதில்லே. ரிட்டையர் ஆகும் கடைசி வருடத்தில் கெட்ட பெயர் வரக் கூடாதே....' பயம் லேசாய் எழுந்ததும் இன்னும் கொஞ்சம் வேகம் காட்டினார். மூச்சு இரைத்தது.

'மறுபடியும் டாக்டர்கிட்டே காட்டி செக் பண்ணிக்கணும்' என்றது மனசு.

"சார் உடம்பு ரொம்ப வீக்கா இருக்கு... ஆப்பிள்... ஆரஞ்சு... வாழைப்பழம்னு நிறையச் சாப்பிடுங்க..." போன தடவை பத்து ரூபாய் கன்சல்டிங் பீஸ் வாங்கிக் கொண்ட டாக்டர் கலபத்தில் அட்வைஸ் செய்ததும் கூடவே நினைவிற்கு வந்தது. அத்துடன் லேசாய்ச் சிரிப்பும் வந்தது.

பி. எஃப். லோன்... எல்.ஐ.சி.... சொசைட்டி லோன்... தீபாவளி அட்வான்ஸ்... கதர்க் கடன்... கைத்தறிக் கடன்... என்று வரிசையாய் நீளும் பிடித்தங்கள் போக, கைக்குக் கிடைக்கும் சொற்ப ஊதியத்தில் ஆப்பிள் சாப்பிடவா முடிகிறது?

'ஆப்பிள்' என்றதும்...

"அடடா... மறந்துட்டோமே... இன்றைக்கு ஆங்கில வகுப்பில்... மாணவர்களுக்கு 'This is a banana... These are bananas.... This is an apple... These are apples....' என்ற இலக்கணப் பகுதி அல்லவா நடத்தணும்?' என்பது பழனிச்சாமி சாருக்கு நினைவுக்கு வந்தது.



# ஏணிகளும் தோணிகளும்

கமலா கந்தசாமி

'சும்மா வாயால சொல்றதை விட பழங்களைக் காட்டிப் பாடத்தை நடத்தி னால் மனசுல நல்லாப் பதியுமே...' என்ற நினைவு வந்ததும் அவசரமாய்ப் பழக்கடை வாசலில் சைக்கிளை நிறுத்தினார்.

கடைப் பையன் அப்போதுதான் கடை யைத் திறந்து வைத்து ஆப்பிள் பழங்களைத் துண்டால் துடைத்து அடுக்கிக் கொண்டிருந் தான்.

பழனிச்சாமியைப் பார்த்ததும் ஆச்சரி யப்பட்ட கடைப்பையன், ''வாங்க ஸார்... சௌக்யமா... ஏது இந்தப் பக்கம்?'' என்ற படி விசாரித்தான். அவன் இவரிடம் படித்த வனும் கூட....

''என்ன மணி... சௌக்யமா இருக் கியா?'' என்று விசாரித்த பழனிச்சாமி... ''மணி... ரெண்டு ஆப்பிளும்... அரை டஜன் வாழைப்பழமும் கொடுப்பா....'' என்றார்.

''சரி ஸார்...'' அவசரமாய் இருப்பதி லேயே பெரிய ஆப்பிள் இரண்டையும்... வாழைப்பழத்தையும் எடுத்து நீட்டிய மணி, ''ஒன்பது ரூபா கொடுங்க சார்...'' என்று கூறியதும்...

''சரிப்பா. ரெண்டு நாளில் சம்பளம் வந்ததும் தந்துடறேன்'' என்றபடி கை நீட்டி னார் பழனிச்சாமி. அவசரமாய்ப் பழங் களைத் தட்டில் திருப்பி வைத்தான் கடைப் பையன்.

''இப்பத்தான் கடை திறந்தேன்... இன்னும் போணியாகலே'' என்று வெடுக் கென்று முகத்தில் அடித்தது போலச் சொல்லி விட்டு ''சாவுக்கிராக்கி...'' என்ற படி முணுமுணுத்தான்.

அதிர்ச்சியில் இடிந்து போனார் பழனிச் சாமி. 'நம்மிடம் படித்த பையனா இப்படிப் பேசி விட்டான்?'' நினைக்கும் போது கசீர் என்றது.

''சரிப்பா... கொண்டா...'' பையில் மனைவி கொடுத்த சில்லறை காசுகளை எண்ணி நீட்டினார்.

பழங்களை வாங்கிக் கொண்டு சைக் கிளைத் தள்ளிய போது -

''என்ன ஸார்... ஆப்பிள்... வாழைப் பழம் எல்லாம்... எங்காவது வெளியூர் போகிறீர்களா? ஸ்கூலுக்கு லீவா?'' - என்ற படி வந்தார் அவருடன் அதே பள்ளியில் பணிபுரியும் அருணாசலம் சார்.

''இல்லே... கிளாசுக்குப் பாடம் நடத் திடத்தான்...'' என்றபடி பழனிச்சாமி அவ சரமாய்ச் சைக்கிளில் ஏறினார்.

''ஏன் சார்... சாக்பீஸால போர்டுல எழுதி நடத்தினாப் பத்தாதா... என்னமோ நல்லாசிரியர் விருது கிடைச்சிட்ட மாதிரி ஏன் சார் இ ப் ப டி அலட்டிக்கறீங்க...'' அருணாசலம் அலட்சியமாய்க் கேட்ட தும்...

''இல்லே சார்... எலிமெண்ட்ரி கிளாஸ்ல... சா ர் ட், எய்ட்ஸ் இ ல் லா ம பாடம் நடத்தக் கூடாது சார்...''

''ஆமாம்... பள்ளிக் கூடத்துல தூ ங் க ற வ னுக்கு நல்லாசிரியர் வி ரு து கிடைக்குது... நீங்க வே ற சார்...'' அருணாசலம் சலித்துக் கொண்டார்.

''விருது முக்கிய மில்லே சார்... நம்ம கிட்டே படிச்சவன் முன் னேறணும்... நாளைக்கு 'சார் நான் உங்ககிட்டே படிச்சவன் சார்... இப்போ நல்லா இருக் கேன்'னு சொல்லணும். அதுதான் உண்மை யான விருது....''

''நீங்க எல்லாம் திருந்த மாட்டீங்க ஸார்'' என்று அலட்சியமாய்ச் சிரித்தார் அருணாசலம் சார்.

அதற்கு மேல் பேசப் பிடிக்காதவர் போல அவர் வேகமாய்ச் சென்றதும்...

அவரிடம் படித்த மணி... பழக்கடை யில் கேவலம் ஒன்பது ரூபாய்க் கடனுக் காகச் 'சாவுக்கிராக்கி' என்று அவமதித்தது நினைவிற்கு வந்ததும்....

'அருணாசலம் சார் சொல்றது கூட நியாயமோ?' என்று நினைத்து... 'ச்சே... அப்படியெல்லாம் நினைக்கக் கூடாது... நம்ம கடமையை நாம சரியாச் செய்யணும்' என்று மறுபடியும் நினைத்து மனசைத் தேற்றிக் கொண்டார்.

காலைப் பிரேயர் முடிந்து முதல் வகுப்பிலேயே ஆங்கில இலக்கணப்

பாடத்தைப் பழனிச்சாமி நடத்திக் கொண்டிருந்தார்.

வாசலில் ஜீப் வந்து நின்றது.

எதிர்பார்த்தபடியே கலெக்டர் வந்து விட்டார்.

''இது எந்த கிளாஸ்... என்ன பாடம்?'' கம்பீரமாய்க் கேட்டுக் கொண்டே வந்த இளைஞர்.... ''நான்காம் வகுப்பு... ஆங்கில இலக்கணம் நடத்திட்டு இருக்கேன்'' என்ற பழனிச்சாமியை ஏறிட்டார்...

''சார்... சார்... நீங்க... பழனிச்சாமி இல்லே...'' ஆச்சரியத்தில் விழிகள் விரிய கலெக்டர் கேட்க...

கலெக்டரின் முகத்தை ஏறிட்ட பழனிச்சாமி சார்...

''ஓ... ரவிச்சந்திரன்... நீயாப்பா?'' மகிழ்ச்சியில் திளைத்தார் பழனிச்சாமி.

''ஆமாம் சார்... தஞ்சாவூர்ல... உங்க கிட்ட படிச்சவன் சார்... 'நிச்சயம் நீ கலெக்டரா வருவேடா'ன்னு நீங்க அடிக்கடி சொல்வீங்க சார். அந்த நம்பிக்கையும் ஆசிர்வாதமும்தான் இன்றைக்கு...''

அவசரத்தில் ரவிச்சந்திரனை நீயாப்பா என்று கேட்டு விட்ட பழனிச்சாமி... தம் தவறை உணர்ந்தவர் போல...

''ஓ... ஸாரி... ஸார்... நீங்க உட்காருங்க ஸார்...'' என்று தமது துண்டால் நாற்காலியில் படிந்திருந்த சாக்பீஸ் தூளைத் துடைத்தார்...

''நோ... பரவாயில்லே... நீங்க பாடத்தை நடத்துங்க ஸார்... நீங்க ஆங்கில இலக்கணப் பாடம் நடத்தற அழகை மறுபடியும் ஒரு தடவை கேட்கணும் போல இருக்கு...''

உட்காராமல் நின்றபடியே கலெக்டர் கேட்டதும்...

''போதும்... இந்த இத்தனை வருட சர்வீசுக்கு இது போதும்'' என்றது அவரின் உள் மனசு. ஒரு தேசிய நல்லாசிரியர் விருது கிடைத்த மகிழ்ச்சி மனதில் நிறைந்திட....

"This is an apple... These are apples..."

தம்மை மறந்து ஆங்கில வகுப்பில் மூழ்கினார் பழனிச்சாமி. ஏணியாய் இருந்தவர், கரை சேர்க்கும் தோணியாகவும் மாறிய திருப்தி நெஞ்செல்லாம் நிறைந்தது.

---



## கதவில்லாத தபால் நிலையம்

ஒரு நகரில் அஞ்சலகம் இருப்பது ஒன்றும் ஆச்சரியமில்லைதான். ஆனால் கதவு ஏதும் இல்லாமல் இருந்தால் அது ஆச்சரியம்தானே! தஞ்சை, வ. உ. சி. நகரில் உள்ள இந்த அஞ்சலகத்திற்குக் கதவு ஏதும் கிடையாது. ஒரு லாரிக்காரர் வந்து இடித்துக் கதவை உடைத்த பிறகு, அதை ரிப்பேர் செய்து தர உரிமையாளர் முன்வரவில்லை. அஞ்சல் துறையினரும் தாங்களாகவே ரிப்பேர் செய்து கொள்ள விதிகள் இடம்தரவில்லை என்பதால், கதவின்றியே காலம் தள்ளுகிறார்கள்!

## ஐயன் குளத்துக்கு அடித்தது அதிர்ஷ்டம்!

தஞ்சை இளைஞர்கள் ஒருபுறம் இலக்கிய அமைப்புக்களை நடத்திக் கொண்டு, காரசாரமான விவாதங்கள் நடத்திக் கொண்டிருக்கிறார்கள் என்றால், மறுபுறம் மக்களின் அன்றாடப் பிரச்னைகளிலும் கவனம் செலுத்துகிறார்கள். உதாரணம் ஐயன் குளம். பல வருடங்களாகத் தூர் எடுக்காமல் பாழடைந்து கொண்டிருந்த இந்தக் குளத்தைக் கல்லூரி மாணவ, மாணவியரையும் மற்றவர்களையும் அழைத்து வந்து தூர் எடுத்துச் சுத்தப்படுத்தி, இப்போது அதிலிருந்து தண்ணீர் எடுத்துக் குடிக்கிற அளவுக்குச் செய்து விட்டார்கள், 'சங்கரா வாலண்டரி அசோசியேஷன்' அமைப்பைச் சேர்ந்த இளைஞர்கள்.








இலவசம்

# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவனது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த ஸீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.

*எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸீரியல்*

## நெஸ்டம்

**முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய் பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்.**

# விடுமுறையில் ஒரு விளையாட்டு

## அகராதி மன்னன்!

**பொ**ழுதுபோக மட்டுமின்றி, ஆங்கில அறிவை வளர்த்துக் கொள்ளவும் உதவும் விளையாட்டு இது. ஒவ்வொருவரிடமும் பேப்பரும் பேனாவும் இருக்கும். ஒருவரிடம் டிக்ஷனரி. அவர் யாருக்கும் அர்த்தம் தெரியாத ஒரு வார்த்தையைப் படிப்பார். அவரவரும் அந்த வார்த்தைக்குப் பொருத்தமானது என்று தாங்கள் கருதும் ஓர் அர்த்தத்தை எழுத வேண்டும். டிக்ஷனரி வைத்திருப்பவர் சரியான அர்த்தத்தை எழுதுவார். பிறகு எல்லாத் தாள்களையும் வாங்கித் தமதுடன் சேர்த்து நன்கு கலைப்பார். ஒவ்வொரு தாளாகப் பிரித்து உரக்கப் படிப்பார். யார் எழுதியது என்பதை மட்டும் சொல்லவே மாட்டார். எல்லோரும் எழுதிய அர்த்தங்களைக் கேட்ட பிறகு ஒவ்வொருவரும் சரியான அர்த்தம் என்று தங்களுக்குத் தோன்றும் அர்த்தத்துக்கு வோட்டுப் போட வேண்டும். உண்மையிலேயே சரியான அர்த்தத்துக்கு வோட்டுப் போடும் ஒவ்வொருவருக்கும் ஒரு பாயிண்ட். சரியான அர்த்தத்துக்கு யாருமே வோட்டுப் போடவில்லையெனில் டிக்ஷனரி வைத்திருப்பவருக்கு ஒரு பாயிண்ட். அடுத்த ரவுண்டில் டிக்ஷனரி அடுத்த நபரிடம் தரப்படும். இப்படியே நேரம் இருக்கும் வரை எத்தனை ரவுண்டு வேணுமானாலும் விளையாடலாம். முடிவில் யார் அதிக மதிப்பெண்கள் பெற்றார் என்று பார்த்து, அவருக்கு ''அகராதி அரசன்'' (அரசி) என்று பட்டம் தரலாம்! இதில் வேடிக்கை என்னவெனில் அவரவரும் எழுதும் கற்பனை அர்த்தங்கள் எழுப்பும் தமாஷ் சிரிப்புத்தான்!

- கோவை, லதா பாலு.

பாலு ஜுவல்லர்ஸ் வழங்கும் ஒரு சவரன் பெறுமானமுள்ள தங்க நகைப் பரிசு பெறுபவர்:

- திருமதி லதா பாலு,
82-B, முதல் மாடி,
காளியப்பன் தெரு,
(ஆறாவது தெரு அருகே)
கே. கே. புதூர்,
கோவை - 641 038.

## சதுரமே சாமர்த்தியம்

**கோ**லப் புள்ளிகள் போல் ஒரு தாளில் சதுர அமைப்பில் (7X7 அல்லது 10X10 என்றிப்படி) இட்டுக் கொள்ளுங்கள். முதல் நபர் தாம் விரும்பும் எந்த ஒரு புள்ளியிலிருந்து வேணுமானாலும் அடுத்த புள்ளிக்கு ஒரு நேர் கோடு வரைய வேண்டும். இடம் வலம், கீழ் மேல் வரையலாம். குறுக்குக் கோடு மட்டும் கூடாது. அடுத்து உள்ளவர் இதே போல் இன்னொரு நேர்கோடு எந்தப் புள்ளியிலிருந்து வேணுமானாலும் தொடங்கி, அடுத்த புள்ளியுடன் இணைத்து வரைவார். இப்படியே இரண்டு அல்லது மூன்று பேர் விளையாடலாம். நெருக்கமாக உள்ள நாலு புள்ளிகளில் மூன்று, நேர் கோடுகளால் இணைக்கப்பட்டிருக்கும் பட்சத்தில், அடுத்து



விளையாட இருப்பவர் நாலாவது கோட்டை இழுத்து, சதுரத்தைப் பூர்த்தி செய்து ஒரு பாயிண்ட் பெறலாம். அதில் அடையாளமாகத் தமது இனிஷியல் பொறிக்கலாம். எல்லாச் சதுரங்களும் பூர்த்தியானதும் ஆட்டம் முடியும். அதிக பாயிண்ட் எடுக்கப் போகிறவருக்கு இப்போதே வாழ்த்து!

- சென்னை - 15, பாளை அசோக்.

## அப்! அப்! அப்!

முதலில் ஒருவர் 'ஒன்று' என்று கூற, அடுத்தவர் 'இரண்டு' என்றும், மூன்றாமவர் 'மூன்று' என்றும் கூற வேண்டும். எத்தனை பேர் விளையாடினாலும் சரி, 'ஏழு' என்ற எண் கூறாமல் 'up' என்று சொல்ல வேண்டும். அதே போல் 14, 21 என ஏழால் வகுபடும் எண்களுக்கும் 'up' என்றே சொல்ல வேண்டும். தவிர ஏழு இடம் பெறும் 17, 27 போன்றவற்றுக்கும் 'up' கூற வேண்டும். அதிகத் தாமதமின்றியும் கூறி வர வேண்டும். ரொம்பத் தாமதித்தாலோ, அல்லது மறதியாகவோ கவனக்குறைவாகவோ 'up' கூறாமல் எண்ணைச் சொல்லி விட்டாலோ அவர் அவுட். பாக்கி நபர்கள் தொடர்ந்து விளையாடலாம். கடைசியில் அவுட் ஆகாமல் மிஞ்சுபவர் கணக்குப் புலி!



7 up போல 6 up, 4 up என்றும் விதம்விதமாக விளையாடலாம். ஞாபக சக்தி பெருகும்; வாய்ப்பாடு நிபுணராகலாம்.

- சென்னை - 17, கஸ்தூரி சாய்ராஜ்.

## ஊது! ஊது! ஊது!

குழந்தைகளிடம் ஆளுக்கொரு பிங்பாங்க் பந்தையும் 'ஸ்டிரா'வையும் (straw) கொடுங்கள். தரையில் சாக்பீஸால் கோடு இழுத்து வரிசையாக நிற்க வையுங்கள். சுமார் பத்தடி தூரத்தில் 'கோல்' கோடு ஒன்று போடுங்கள். 'ரெடி' என்றதும் குழந்தைகள் பந்தைத் தரையில் கோடு மீது வைத்துத் தவழ்ந்த நிலையில் அதனை ஸ்டிரா மூலம் ஊதித் தள்ளிக் கொண்டே போக வேண்டும். யார் பந்து கோல் கோட்டை முதலில் அடைகிறதோ, அந்தக் குழந்தைக்கே வெற்றிப் பரிசு!



- திருநெல்வேலி - 6, ஆர். மீனாட்சி.

## உப்பு, புளி, மிளகாய்...

ஆறு குழந்தைகளை வட்டமாக உட்கார வையுங்கள். ஏழாவதாக ஒருவன் வட்டத்துக்கு வெளியே நிற்கட்டும். அவனிடம் ஆறு துண்டுக் காகிதங்களும் ஒரு பேனாவும் இருக்கும். அவன்தான் மளிகைக் கடைக்காரர். வட்டத்தில் இருக்கும் ஆறு பேரும் நீங்கள் 'ரெடி' என்றதும் வரிசையாகத் தங்களுக்குத் தேவைப்படும் ஒவ்வொரு பொருளைக் கூறி வருவார்கள். சொல்லி முடித்ததும் அரை நிமிட இடைவெளி விட்டு நீங்கள் மறுபடி 'ரெடி' கூற, ''மளிகைக் கடைக்காரர்'' ஒவ்வொரு துண்டுத் தாளிலும் ஒவ்வொரு பெயராக ஆறு பொருள்களையும் எழுதுவான். பிறகு யார் யார் எந்தெந்தப் பொருளைக் கேட்டார்களோ அவர்களிடம் கொடுப்பான். பண்டங்களைச் சரியாக நினைவில் வைத்துக் கொண்டதற்கு ஒரு பாயிண்ட் எனில், யார் எதைக் கேட்டது என்று நினைவு வைத்திருந்ததற்கு இன்னொரு பாயிண்ட். ஆக 2, 1 அல்லது 0 பாயிண்ட் கடைக்காரருக்குக் கிடைக்கும். இப்போது அந்தச் சிறுவனை வட்டத்தில் உட்காரச் செய்து வட்டத்தில் இதுவரை அமர்ந்திருந்த அடுத்த சிறுவனை அல்லது சிறுமியை ''மளிகைக் கடைக்காரர்'' ஆக்கலாம். இரண்டு சுற்று முதல் எத்தனை சுற்று வேணுமானாலும் வந்து, யாருக்கு அதிக பாயிண்ட் என்று நிர்ணயித்துப் பரிசு தரலாம்.

- எலப்பாக்கம், சொ. ரூபாவதி.

# இயற்கை அளித்த சோதனையும் கல்பனா போட்ட கண்டிஷனும்!

ஒரு நிர்மானத்துக்கு வந்தவனாக கும்முத் சுக்கானியை அழைத்து, ''ஷூட்டிங் ரத்தாகி விட்டதால் நீங்கள் பம்பாய் புறப்பட்டுச் செல்லலாம்; மறுபடி தகவல் கொடுக்கிறேன்'' என்று கூறி அவரது பயணத்துக்கு ஏற்பாடு செய்யுமாறு என் மானேஜரிடம் சொன்னேன். அத்துடன் நில்லாமல், நானும் சில தினங்களில் பம்பாய் சென்றேன். கும்முத் சுக்கானியை ஏற்பாடு செய்தளித்த கிஷோர் சாபுவிடம் நிலைமையை எடுத்துக் கூறி வருத்தம் தெரிவித்தேன். கிஷோர் சாபு புரிந்து கொண்டவராக, ''அவரைப் பயன்படுத்திக் கொள்வதும் பயன்படுத்தாததும் உங்கள் உரிமை; ஆனால் ஒப்பந்தப்படி முப்பதாயிரம் ரூபாய் அவருக்குத் தந்து விடுவது நல்லது; பின்னால் தகராறுக்கு இடமில்லாதிருக்கும்'' என்று யோசனை சொன்னார். அவர் கருத்தை நானும் ஏற்றுக் கொண்டு, கும்முத் சுக்கானிக்குப் பணமும் தந்து, விடுதலையும் அளித்து விட்டேன்!

கும்முத் சுக்கானிக்குப் பதில் யாரைப் போடலாம்? யோசித்தேன். ''மறுபடி புது முகம் தேடிக் கொண்டிருந்தால் கால விரயமாகும்; திட்டமிட்டபடி படத்தை முடிக்க முடியாது போகும்'' என்று நண்பர்கள் எடுத்துக்காட்டவே, தமிழில் அந்த ரோலில் நடித்த ராஜஸ்ரீயையே ஹிந்தியிலும் நடிக்க ஒப்பந்தம் செய்தேன். குளியலறைப் பாடல் காட்சியை மீண்டும் படமாக்கினோம். இந்தக் காட்சி பின்னால் ஒரு பெரிய பிரச்னையாக உருவாகப் போகிறது என்று நான் அப்போது உணர்ந்திருந்தால்.... ஆனால் வரப் போவதை அறியும் ஞான திருஷ்டி எனக்கு இருக்கவில்லையே!



◄ ப்யார் கியே ஜா படத்தில் ஒரு காட்சி

அனைவரிடமும் ஒட்டுமொத்தமாகக் கால்ஷீட் பெற்று, நாற்பது நாள் ஷூட்டிங்குக்கு ஆலியாறு வந்து சேர்ந்து விட்டோம். மளமளவென்று அங்கே படப்பிடிப்பை முடித்துக் கொண்டு கடைசி சில தினங்களில் சென்னையில் எடுக்க வேண்டிய காட்சிகளையும் எடுத்து விட்டால் படமே முடிந்து விடும்.

மறுநாள் ஷூட்டிங் தொடங்க வேண்டும். எடுக்க வேண்டிய காட்சிகள் பற்றியும் காமிரா கோணங்கள் குறித்தும் யோசித்தபடியே இரவு தூங்கிப் போனேன். காலையில் எழுந்ததும் எழுந்திருக்காததுமாய்ப் புரொடக்ஷன் மானேஜர் எதிரே வந்து நின்றார். ''எல்லாரையும் தயார்ப்படுத்துங்கள்; ஒன்பது மணிக்கு 'டாண்'ணென்று ஷூட்டிங் ஆரம்பிக்கணும்; இருக்கிற நாற்

டைரக்டர் ஸ்ரீதர்

பது நாளில் ஒருநாள் மிஸ் ஆனாலும் ஷெட்யூல் அப்செட் ஆகி பிரச்னை ஏற்படும்'' என்று விரட்டினேன்.

புரொடக்ஷன் மானேஜர் தயங்கித் தயங்கி நின்றார். ''என்ன பிராப்ளம்?'' என்று நான் கேட்க, ''வெளியே மழை'' என்றார்.

நான் காற்றுப் போன பலூன் ஆனேன். காலை ஆரம்பித்த மழை மாலை வரை தொடர்ந்தது! மறுநாளும் நீடித்தது! அதற்கு அடுத்த நாள்... நான்காம் நாள்... ஐந்தாம் நாள்... ஊஹூம் மழை விட்டபாடில்லை! வானமே பிளந்தது போல் கொட்டிக் கொண்டே இருந்தது! மனிதர்கள் அளிக்கும் சோதனைகளை வேணுமானால் பேசித் தீர்த்துக் கொள்ளலாம். இயற்கை அளிக்கும் இந்தச் சோதனைக்கு என்ன செய்வது?

கால்ஷீட் வீணாகிக் கொண்டிருந்தது. ஆர்டிஸ்டுகளும் டெக்னீஷியன்களும் வெளியேயும் எங்கும் போக முடியாததால் சீட்டு, அரட்டை, சாப்பாடு, தூக்கம் என்று பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தனர்.

ஐந்தாறு நாட்களுக்குப் பிறகு லேசாகச் சூரியன் தலைகாட்ட, எல்லோருக்கும் உற்சாகம். மளமளவென்று ஷூட்டிங் வேலைகளைக் கவனித்தோம். 'இழந்த நேரத்தைத் திரும்பப் பெற முடியாது' என்பார்கள். நாங்கள் பெற்றோம்! இரண்டு நாள் ஷூட்டிங் ஷெட்யூலை ஒரே நாளில் முடித்தோம்!

ஆனால் மறுநாள் காலை... என்ன ஏமாற்றம்! 'என்னாலும் இழந்த நேரத்தைத் திரும்பப் பெற முடியும்' என்று கூறுவது போல முந்தைய நாளுக்கும் சேர்த்து வைத்து வருணன் கொட்டித் தீர்த்தான். அடுத்த சில நாட்கள்... மழை விட்ட பாடில்லை! என் சினிமாத் துறை வாழ்க்கையிலேயே மிகவும் மோசமான அனுபவம் இதுதான். நாற்பது நாள் ஷெட்யூலில் மூன்று நாட்கள் மட்டுமே படப்பிடிப்பு நடந்தது. திட்டமிட்டதில் பத்தில் ஒரு பங்குப் படம் கூட எடுக்க முடியவில்லை.

நடிக நடிகையர் எல்லாரும் அனுதாபம் தெரிவித்து விட்டுப் போய்ச் சேர்ந்தார்கள். அதன்பின் அந்தப் படத்துக்குத் தொடர்ந்தாற்போல் கால்ஷீட் வாங்குவது குதிரைக் கொம்பாகி விட்டது. அவ்வப்போது கால்ஷீட் கிடைத்தபோதெல்லாம் படப்பிடிப்பு என்று படம் சிறிது சிறிதாக வளர, பியார் கியே ஜா முடிவடையாமல் ஒன்றரை வருஷங்களுக்கு மேல் இழுத்தடித்தது.

இது போதாதென்று, காஞ்சனா நடித்த ரோலுக்கு இந்தியில் நான் ஒப்பந்தம் செய்த கல்பனா வேறு, இறுதிக் கட்டத்தில் ஒரு பெரிய தலைவலியைக் கொடுத்தார்.

## மீராவும் ஹரியும் எங்கள் கூடவே வாழ்ந்தார்கள்!



◆ வாஸந்தியின் ''காதலெனும் வானவில்'' மிகவும் அருமையான தொடர் கதை. இருபத்து நான்கு வாரங்கள் போனதே தெரியவில்லை.
செத்தோடு, சத்தியானந்தன்.

◆ இருபத்திநான்கு வாரங்களாக மீராவும் ஹரியும் எங்களுடனே இருந்து, பழகி, பிரிந்து சென்றுவிட்ட ஒரு பிரமையைக் 'காதலெனும் வானவில்' ஏற்படுத்திவிட்டது. மீரா - ஹரியின் ஆத்மார்த்தமான சிநேகிதம் போற்றுதற்குரியது.
சென்னை - 5, உமா.

◆ ''காதலெனும் வானவில்'' பெயருக்கு ஏற்ப வானவில் போன்று மறைந்தாலும் நட்பை நட்பாகவே முடித்து, ஹரியையும் மீராவையும் பிரித்து வைத்ததும் கூட கதையின் சிறப்பாகவே இருக்கிறது.
சிதம்பரம், ஆர். தமிழரசி தேவசேனாபதி.

◆ ஓவியங்களின் மூலம் கதாபாத்திரங்களுக்கு உயிர் கொடுத்த மாருதிக்கு எங்கள் பாராட்டுக்களும், வாழ்த்துக்களும்.
தக்கோலம், அ. முஸ்தபா.

◆ மீராவின் அப்பா இறந்தபின், அவருடைய கண்ணை எடுத்து, ஹரிக்கு வைத்து, அவனைப் பார்வையுள்ளவனாக ஆக்கியிருக்கலாமே என்னும் எங்கள் ஆதங்கத்தைக் கதாசிரியர் புரிந்து கொள்வார் என்று நம்புகிறோம்.
கிருஷ்ணகிரி, எல். நாகரத்தினம்.

◆ குடும்பம் என்ற பாரம்பரியத்தைக் காக்கச் செய்யும் பாதுகாப்பு முயற்சிகள், உண்மைக் காதலையும் அறிய முடியாமல் போய் விடலாம்; அல்லது தியாகம் செய்ய நேரிடலாம். இவற்றை அற்புதமாக எடுத்து காட்டி விட்டார் வாஸந்தி.
ஆரணி, ஜெ. நந்தினி.

அவரிடம் இரண்டு நாள் கால்ஷீட் கிடைத்தால் போதும். ''என்ன பார்வை; உந்தன் பார்வை'' என்பதற்கு இணையான இந்திப் பாடல் காட்சியை எடுத்து, படத்தையே முடித்து விடலாம் என்கிற நிலை. ஆனால் அவரோ கால்ஷீட் தராமலேயே காலம் கடத்தி வந்தார். போதாக்குறைக்கு கிஷோர் குமார் வேறு, ''என்ன டைரக்டர் ஸார், உங்க ஹீரோயின் எப்ப கால்ஷீட் தரப் போறாங்க? கொஞ்சம் மனசு வைச்சு சீக்கிரம் தந்து படத்தை முடிக்க உதவச் சொல்லுங்க ஸார்'' என்று என்னைக் கிண்டல் செய்வார். எனக்கோ 'கல்பனா ஏன் இப்படிக் காலம் கடத்துகிறார்?' என்பது புரியாத புதிராக இருந்தது.

அவரிடம் பேசினால் ஏதேதோ சால்ஜாப்புதான் சொல்வார் என்பதால் யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன். கல்பனாவின் மானேஜர் கணேச அய்யரை அழைத்தேன். ''இதோ பாருங்க; என்ன பிரச்னை? உங்களுக்குத் தெரியாமலிருக்காது. எதுவாயிருந்தாலும் மனம் விட்டுச் சொல்லுங்க. சரி பண்ணப் பார்ப்போம்,'' என்றேன்.

கணேச அய்யர் முதலில் சற்றுத் தயங்கினார். பிறகு என்ன நினைத்தாரோ, ''நான் விஷயத்தை விண்டு சொல்லிடறேன், ஸார்'' என்று ஆரம்பித்தார். ''நீங்க ராஜஸ்ரீயை வைத்து ஒரு குளியலறைக் காட்சி எடுத்திருக்கீங்க இல்லையா? அதனால அவருக்குத்தான் இந்தப் படத்தில் பாபுலாரிடி அதிகமாயிடும்; தனக்குக் குறைஞ்சுடும்னு கல்பனா நினைக்கிறாங்க. அதனால, தன்னையும் வைச்சு அதே போன்ற ஒரு குளியலறைக் காட்சி எடுத்துப் படத்தில் நீங்க சேர்க்கணும்னு ஆசைப் படறாங்க!'' என்றார்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. 'எந்த நடிகையாவது படத்தில் வேறு ஒரு நடிகைக்குத் தரப்பட்டிருப்பது போன்ற குளியலறைக் காட்சி, தனக்கும் வேண்டும் என்று சொல்வாரா? இவர் சொல்கிறாரே!' என்று வியந்தேன். அது மட்டுமா? 'இதை எப்படிச் சமாளிப்பது?' என்று பிரமித்தும் போனேன். 'ஒரே படத்தில் இரு நடிகையருக்கு ஒரே மாதிரியான குளியலறைக் காட்சி அமைந்தால் அது இயல்பாக இருக்குமா? ரசிகர்கள் ஏற்பார்களா?' என்பது போன்ற ஏராளக் கேள்விகள் என் மனத்தில் எழுந்தன. அவற்றுக்கு எப்படி, என்ன விடை கண்டேன்? சொல்லத்தான் நினைக்கிறேன். ஆனால் 'இந்த இதழுக்கு இவ்வளவு போதும்' என்கிறாரே, கல்கி ஆசிரியர்!

படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்



பிரும்மாண்டமான தோற்றம் பெற்றுள்ள
ரூ. 26 கோடி சக்தி சோயா ஆலையை நான்
பார்த்திடும் போது...



# சக்தி பைனான்ஸில் மட்டுமல்ல 500 கோடி ரூபாய் மதிப்புடைய சக்தி குழுவிலும் நான் அங்கம் என்று அகமகிழ்கிறேன்



சக்தி பைனான்ஸில்
டிபாசிட்தாரர் ஆழமான
நம்பிக்கை கொண்டிருப்பதில்
வியப்பேது?

ஒவ்வொரு வினாடியிலும்
ஒவ்வொரு நாளிலும், ஒவ்வொரு
ஆண்டிலும் அமோகமாக வளரும்
நம்பிக்கை.





**எங்களைப் பெரிதும் நம்பும் வாடிக்கையாளர்களில் நீங்களும் ஒருவராகுங்கள்**




## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

டாக்டர் நா. மகாலிங்கம் - தலைவர்
பதிவு அலுவலகம்: 475, டாக்டர் நஞ்சப்பா சாலை, கோயம்புத்தூர்-641 018.

UIPC SF

# முதல்வரின் சிக்கன நடவடிக்கை மெய்சிலிர்க்க வைக்கிறதே!



☛ அரசியல் மோசடி?



☛ சிக்கன நடவடிக்கை!

● மல்லிகை மன்னன், மதுரை.

*? 'விவசாயிகள் கடனை ரத்து செய்வதாக வி. பி. சிங் சொன்னது சுத்த அரசியல் மோசடி'' என்று சுட்டிக் காட்டியிருக்கிறாரே, ஜெயலலிதா?*

! விவசாயிகள் கடன் என்ன, எந்தக் கடனையும் ரத்து செய் வது, 'இலவசம்' என்ற பெயரில் வாரி வழங்குவது எல்லாம் மோசடிதான். கார ணம், எல்லாவற்றுக்கும் மக்களின் வரிப் பணம்தான் பயனாகிறது. பணக்காரன் - ஏழை என்ற வித்தியாசமின்றி, எல்லோ ருமே வரி செலுத்துகிறோம். இன்னும் கேட்டால், ஏழைகள்தான் பணக்காரர் களை விட அதிக வரி செலுத்துகிறார்கள். ஆனால் அது அவர்களுக்கே தெரியாது. அது ஒரு புறமிருக்க, ஒரு முன்னாள் பிரத மரைப் பற்றி இந்நாள் முதல்வர் வார்த் தைகளை அளந்து பேசுவதே நல்லது. இரு வரும் பயணப்படுவது அரசியல் படகு களில்தான். எப்போது ஓட்டை விழும் என்று சொல்ல முடியாது. குறைகூறக் கூடாது என்பதல்ல; அதைக் கண்ணியத் துடன் செய்வது நலம்.

● ஆர். எஸ். கீதாராணி, பழனி.

*? 'தி. மு. க. வை அழித்தால்தான் காங்கிரஸ் கட்சியை வளர்க்க முடியும்' என்று ஒரு பேட்டியில் வாழப்பாடி கூறியுள்ளாரே?*

! தி. மு. க. என்ன, அ. தி. மு. க. வும் இல்லாமல் போய், மைதானம் மொத்த மும் காங்கிரஸ் கட்சி மட்டுமே இருந் தாலும் அவர்கள் இரு கோஷ்டியாகப் பிரிந்து, காலை வாரி விட்டும் ஸேம் ஸைட் கோல் போட்டும் தோற்றுப் போவார்கள்!

● எம். தனபாலன், கரூர். ❑

*? மக்களின் பாதுகாவலர்கள் என்று கூறப்படும் போலீஸ்காரர்கள், பொது மக்களுக்குத் தொல்லை தருவதும் குற்றங்களுக் குத் துணை போவதும் எதனால்?*

! இதுபோன்ற பிரச்னைகள் பல வற்றையும் ஆராய்ந்து, போலீஸ் கமிஷன் சீர்திருத்தங்களையும் சிபாரிசு செய்துள்ளது. ஆனால் அதையெல்லாம் ஆட்சியில் அம ரும் அரசியல்வாதிகள் கவனித்துச் சரிசெய்வதில்லை. சுயநலம்தான் காரணம். அவர்களே பல விஷயங்களில் தலையிட்டுத் தவறான முறையில் போலீ ஸைப் பயன்படுத்துகிறார்கள். இதனால் போலீஸுக்கும் குளிர் விட்டுப் போய், அவர்களும் முறைகேடாக நடந்து கொள் கிறார்கள்.

● வி. பி. திருநாவுக்கரசு, திருத்துறைப் பூண்டி.

*? வள்ளுவர் கோட்டத்தை ஏர்கண்டிஷன் செய்யும் 'ஜெ' திட்டம் பற்றி...?*

! கருணாநிதி முதல்வராக இருந்த போது பேசப்பட்ட திட்டம்தான். அவர் முன்பு முன்னின்று கட்டிய கோட்டம் என்பதா லேயே திட்டம் கிடப்பில் போடப்பட வாய்ப்புண்டு. அல்லாமல் நிறைவேறி னால் அதிசயம்தான். புரட்சிதான்!

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

*? தமிழகத்தில் பத்திரிகை சுதந்திரம் எப்படி இருக்கிறது?*

! ஒருபுறம் துஷ்பிரயோகமாகிறது; இன்னொரு புறம் பற்றி எரிகிறது. இரண்டுமே நல்லதல்ல.

● வ. தே. பா., சென்னை.

*? தமிழகத்தில் நவோதயா பள்ளிகள் வரவேற்கப்பட வேண்டியதுதானே?*

! நவோதயா பள்ளிகளில் சிறப்பான கல்வி போதனை இருக்கும் என்று கருதப் படுகிறது. எல்லாப் பள்ளிகளுமே நவோ தயா தரத்துக்கு உயர்ந்தால் வரவேற்கலாம். ஆனால் நவோதயாவும் சராசரிப் பள்ளியாக

மாறவே நம் நாட்டில் வாய்ப்பு அதிகம்! இன்று அரசியல்வாதிகள் கல்விக்கு அளிக்கும் முக்கியத்துவம் அந்த நிலையில்தான் உள்ளது.

● மா. பழனிச்சாமி, கோவை.

*? நம் நாட்டில் யாருக்கு மரியாதை குறைவாகக் கிடைப்பது வருத்தத்தைத் தருகிறது?*

! நேர்மையாளனுக்கும் திறமைசாலிக்கும்.

● மோகனப்பிரபா, கள்ளியம்புதூர்.

*? அமைச்சருக்குப் பின்னால் கார் அணிவகுப்பு கூடாது. முதல்வரின் சிக்கன நடவடிக்கை மெச்சிவிர்க்க வைக்கிறதே?*

! பின்னால்தானே போகக் கூடாது? புல்லரிக்கும் விதமாக முன்னால் போனால் போச்சு!

● த. குணசேகரன், கவுந்தப்பாடி.

*? கடமை, கண்ணியம், கட்டுப்பாடு - இன்று தி. மு. க. வில் அதிகமா? அ. தி. மு.*



☛ கட்டிய கோட்டம்



☛ 'தி.மு.க.வை அழி!'

*க. வில் அதிகமா?*

! அ. தி. மு. க. வில்தான். புரட்சித் தலைவியின் புகழ் பாடும் கண்ணியச் செயலே நம் கடமை என்பதில் கட்டுப்பாடாய் இருக்கிறார்கள்!

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? போகிற போக்கைப் பார்த்தால், 'ஜெயலலிதா மாநிலத்திலுள்ள, ஜெயலலிதா மாவட்டத்தின், ஜெயலலிதா வட்டத்தைச் சேர்ந்த, ஜெயலலிதா ஊரில், ஜெயலலிதா தெருவிலிருக்கும் இன்னாரைப் பார்க்கப் போனேன்' என்று சொல்லும்படியிருக்கும் போலிருக்கே?*

! ஜெயலலிதா போக்குவரத்துக் கழக பஸ்ஸில் ஏறி ஜெயலலிதா தானைத் தானே பார்த்து வரப் போகிறீர்கள்?

● பாலசுப்பிரமணியம், செங்குன்றம்.

*? "எங்கடா உங்க எம். எல். ஏ.?" என்ற பெயரில் படம் வரப் போகிறதாமே?*

! எம். எல். ஏக்களே இல்லாத கட்சிகளுக்கு இதைப் பற்றிய கவலை இல்லை!

● எம். ஜாபர் ஸலாம், திட்டச்சேரி.

*? முன்னணி நடிகர் செல்வாக்குக் குறைவது அவர் சொந்தமாகப் படம் எடுப்பதால்தானா?*

! சொந்தமாகப் படம் எடுக்க முற்படுவதே செல்வாக்குக் குறைவதால்தான்!

● லீலா ராம், தக்கலை.

*? உங்களைச் சமீபத்தில் உலுக்கிய சம்பவம் ஒன்று?*

! மோட்டார் சைக்கிளுக்குப் போன வருஷம் 90 ரூபாய் சாலை வரி கட்டியவனை, இந்த ஆண்டு ரூ 210 கட்டச் சொன்ன போது, அந்த அதிகாரியை உலுக்கி எடுக்கத்தான் தோன்றியது; முடியாததால் உள்ளம் உலுங்கியது!

● கே. சத்தியநாராயணன், வேலூர்.

*? உங்களைத் தாக்கி அரசி பதில்களில் கூறப்பட்டுள்ளது குறித்து?*

! 1. ஏற்கெனவே செய்யப்பட்டுள்ள தவறுகள் இன்று புதிய தவறுகளுக்கு முன்னுதாரணம் ஆகக் கூடாது. நல்ல மரபுகள் மட்டுமே முன்னுதாரணமாக ஏற்கப்பட வேண்டும். 2. அரசாங்கம் ஒரு சொத்தை விற்கும் போது பணம் மட்டும் கருத்தில் கொள்ளப்படுவதில்லை. யாருக்கு, எதற்காக விற்கப்படுகிறது என்பதும் முக்கியம். 3. ஒருவர் மந்திரி அல்லது முதல்வராகும் போது சொத்து விவரம் தரப்பட வேண்டும் என்பது இதற்காகத்தான். 4. தொழில் நிறுவனங்களுடன் தொடர்பு இருந்தால் அதை மந்திரியானவுடன் துண்டித்துக் கொள்ளும் ஆரோக்கிய மரபும் முன்பு உண்டு. 5. மந்திரி அல்லது முதல்வர் அரசு சொத்தை வாங்கக் கூடாது அரசுக்கு எதையும் விற்கக் கூடாது என்ற விதிமுறை மீறப்பட்டுள்ளதில் ஐயமில்லை. 6. 'அறிவு ஜீவி' பட்டத்துக்கு நன்றி.

● எம். ராஜேந்திரன், லால்குடி.

*? தமிழ்ப் புது வருடத்தில் வாசகர்களுக்குத் தாங்கள் தெரிவிக்க விரும்புவது என்ன?*

! சனி ஞாயிறு லீவு; திங்கள் வருஷப் பிறப்பு லீவு; செவ்வாய் அம்பேத்காருக்காக லீவு; புதன் மகாவீருக்காக லீவு; வியாழன் மட்டம் போட்டால், வெள்ளி குட் பிரைடே லீவு; சனி, ஞாயிறு வழக்கமான லீவு - இப்படி ஒன்பது நாள் லீவு விடும் நாடு உருப்படாது என்பதே.

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
எம். தனபாலன்,
15 A/1 5வது கிராஸ்,
செங்குந்தபுரம்,
கரூர் - 639 002.

கலெக்டர் பேட்டி :

# விடுதலைப் புலிகள் அடங்கவும் பூனை மீன்கள் செழிக்கவும்...

"தஞ்சை மாவட்டத்தின் ஆட்சித் தலைவராகப் பொறுப்பேற்ற போது, என் முன்னால் இருந்த இரண்டு பெரும் பிரச்னைகள் : விடுதலைப் புலிகள் மற்றும் பாசனம். இவற்றில்தான் என் முழு கவனத்தையும் செலுத்த வேண்டியிருந்தது..." என்று நம்மிடம் பேச ஆரம்பிக்கிறார் தஞ்சை கலெக்டர் சண்முக ராஜேஸ்வரன்.

"முதலில் இருபத்து நான்கு மணி நேரமும் கடற்கரைப் பகுதிகளில் ரோந்துப் பணியைத் தீவிரமாக்கினோம். கப்பல் ரோந்தும் அதிகரிக்கப்பட்டது. விடுதலைப் புலிகள் நமது மீனவர்களைப் போல் நம்மிடையே ஊடுருவுவதைத் தடுப்பதற்கு, மீனவர்கள் அனைவருக்கும் அடையாள அட்டைகளை வழங்கினோம். விசைப் படகுகள் வைத்திருப்பவர்கள், தங்கள் படகுக்குத் தேவையான டீசல், பெட்ரோல் தவிர அதிக அளவில் எடுத்துச் செல்கிறார்களா என்பதைக் கண்காணித்துக் கட்டுப்படுத்தினோம். இதனால் விடுதலைப் புலிகளின் வரவு இல்லாமல் போனதோடு, இங்கிருந்து இலங்கைக்கு டீசல், பெட்ரோல் போன்றவை கடத்தப்படுவதும் முழுமையாகத் தடுக்கப்பட்டது.

"அடுத்தது பாசனம். கால்வாய்கள் சீரமைப்பு போன்றவற்றில் குடிமராமத்துப் பணிகள் ஊக்குவிக்கப்பட்டன. அதனால் தண்ணீர் வீணாவது தவிர்க்கப்பட்டு விளைச்சலை அதிகப்படுத்த முடிந்தது. விதைகள், உரம், பூச்சி மருந்துகள் போன்றவையும் விவசாயக் கடன்களும் கால தாமதமின்றி உடனடியாக வழங்கப்பட்டன. இது விவசாயிகளுக்கு மிகவும் உபயோகமாக இருந்தது என்று சொல்லத் தேவையில்லை."

"விவசாயம் தவிர, தொழில் வளர்ச்சிக்கு ஏதேனும் திட்டங்கள் இருக்கின்றனவா?"

"பெரிய பெரிய கனரகத் தொழில்களை விட, விவசாயம் சார்ந்த தொழில்களில்தான் இம் மாவட்ட மக்கள் ஆர்வம் காட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். காரணம், இவர்கள் அடிப்படையில் விவசாயிகள். இப்போது சிலர் நெல் பயிரைத் தவிர கரும்புச் சாகுபடிக்குத் தயாராய் இருக்கிறார்கள். மீன் வளர்ப்பிலும் ஒருசிலர் ஆர்வம் காட்ட ஆரம்பித்திருக்கிறார்கள். அரவத்தூர், வலங்கைமான் பகுதிகளில் அமெரிக்கன் கேட் ஃபிஷ் * (American cat fish) வளர்ப்பு ஆரம்பமாகியிருக்கிறது. அது மாவட்டத்தின் மற்ற பகுதிகளில் உள்ளவர்களையும் ஊக்குவிக்கும் என்று நம்புகிறேன்."

"தஞ்சை நகர மக்கள் அனைவரும் ஒட்டுமொத்தமாகக் கூறுவது, மேம்பாலம் பற்றித்தான். இப்போதுள்ள பாலம் மிகவும் பழையது என்பதால் வாகனங்கள் இரண்டு மூன்று கிலோ மீட்டர்கள் சுற்றிக் கொண்டு தான் நகருக்குள் நுழைய வேண்டியிருக்கிறது!"

"அது ரயில்வே லைனுக்கு மேலுள்ள மேம்பாலம். நமது தரப்பில் எந்தவிதமான தாமதமும் இல்லை. ரயில்வேயில்தான் பெண்டிங்கில் உள்ளது. மேலும் தஞ்சை நகருக்கு ஒரு பைபாஸ் ரோடு அவசியம் என்பதால் ஏழு கோடி ரூபாய்ச் செலவில் அதற்கான திட்டம் ஒன்றையும் அரசுக்கு அனுப்பியுள்ளோம். இப்போதுள்ள குடிநீர் ஆதாரங்கள் தஞ்சை நகர மக்களின் முழுக் குடிநீர்த் தேவையையும் பூர்த்தி செய்ய இயலவில்லை என்பதால், தஞ்சைக்குக் கொள்ளிடத்திலிருந்து குடிநீர் கொண்டு

---

* பூனை மீசை போன்ற அமைப்பு வாயருகே உள்ளதால் இவ்வாறு அழைக்கப்படுகின்றன. புதுத் தண்ணீரில் நன்கு வளர்வன.

வரும் திட்டமொன்றையும் அரசுக்கு அனுப்பியிருக்கிறோம்.

''நீங்கள் தலைவராக இருக்கிற சரஸ்வதி மகால் நூலகத்தில் ஏராளமான பெயிண்டிங்குகளும் ஓவியங்களும் பாது காக்கப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு மனி தனின் முகமும் எந்த அளவுக்கு மிருகங் களின் முகங்களுடன் ஒத்துப் போகின்றன என்பதைப் படங்களின் மூலம் விளக்கி, அந்தந்த மிருகங்களின் குணங்களோடு மனிதர்களின் குணங்களும் ஒத்துப் போகின்றன என்பது போன்ற ஓவியங் களும் நிறையவே இருக்கின்றன.



இவற்றையெல்லாம் ஏன் புத்தகங்களாக வெளியிடக் கூடாது?''

''நீங்கள் சொல்வது நல்ல யோசனை. ஏற்றுக் கொள்கிறோம்.''

''சத்திரம் டிரஸ்ட். அதற்கும் நீங்கள் தான் தலைவர். அதில் இயங்கும் சத்திரம் மேல்நிலைப் பள்ளித் தலைமை ஆசிரியர் ஓய்வு பெற்றுச் சென்ற போது, கணக்கு வழக்குகளை ஒப்படைக்காமலே சென்றி ருக்கிறார். ஆடிட்டிங் செய்த போது அவர் களும் புகார் கூறியிருக்கிறார்கள். ஒருவர் ஓய்வு பெறும் போது, எப்படிக் கணக்கு வழக்குகளை வாங்கிக் கொள்ளாமல் அவரைப் பொறுப்பிலிருந்து விடுவித் தார்கள் என்பது ஆச்சரியமாக இருக்கிறது. இதுபற்றி அப்பள்ளியில் பணிபுரியும் ஆசிரி யர்கள் புகார் கூறியும் கூட யாரும் நடவ டிக்கை எடுக்கவில்லை என்று சொல்லப் படுகிறதே?''

''அந்த டிரஸ்டின் நிர்வாகப் பொறுப்பை நேரடியாகக் கவனித்து வருபவர் சத்திரம் தாசில்தார்தான். அவர் மேல் இப்போது நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது. ஓய்வு பெற்ற அந்தத் தலைமை ஆசிரியரிடமிருந்தும் பணத்தைத் திரும்ப வசூலித்துக் கொண் டிருக்கிறோம்.''

''அண்மையில் கூட குடிதாங்கி என்ற கிராமத்தில் ஹரிஜனப் பிணத் தைப் பொது வழியில் கொண்டு செல்வதற்கு மற்ற ஜாதியினர் எதிர்ப்புத் தெரிவித் தது பற்றிச் சட்ட சபையிலேயே விவா திக்கப்பட்டது. அதற்கு என்ன செய் தீர்கள்?''

''உடனடியாக நேரில் சென்று பேசி னோம். இது மாதிரி யான ஜாதிப் பிரச் னைகளைச் சட்டத் தின் மூலம் எடுக்கப் படும் நடவடிக்கைக ளால் தீர்த்துவிட முடியாது என்பதால், இரு தரப்பினரிடமும் பக்குவமாகப் பேசி, எடுத்துச் சொல்லி, அவர்களிடையே ஆரோக்கியமானதொரு மனமாற்றத்தைக் கொண்டுவர முயற்சி செய்து கொண் டிருக்கிறோம். எங்களின் அணுகுமுறை, உடனடியாகப் பயனளிக்கா விட்டாலும், அவர்களின் மனத்தில் ஆரோக்கிய சிந்த னைக்கான விதைகளையாவது தூவும் என் பதில் சந்தேகமில்லை!''

பேட்டி : **இளங்கோவன்**

அட்டை (தமிழ்ப் பல்கலைக்கழக நூலகம், பெரிய கோயில், கண்ணாடி ஓவியங்களுடன் ஈஸ்வர்லால்) வண்ணப் படங்களும், தஞ்சை தொடர்பான மற்ற படங்களும் : **யோகா**



# சிங்காரவேலன்

"இவ்வளவு நாட்கள் உன்னிடம் சொல்லாத ரகசியத்தை இப்போது சொல்லப் போகிறேன்" என்று சுமித்ரா, மகன் கமல்ஹாசனிடம் கூறித் தம் கணவர் விஜயகுமாரின் புகைப்படத்தைக் காண்பிக்க -

கமலின் மனக் கண்முன் அந்தக் காட்சி விரிகிறது...

தம்முடைய நிலத்தில் தமக்குத் தெரியாமல் மூன்று ரௌடிகள் கள்ளச் சாராயம் காய்ச்சுவதைக் கண்டுபிடித்து விடும் விஜயகுமார், அதைத் தடுக்கப் போக, அவர்கள் அவரைத் தாக்க, அவர் இறந்து போகிறார்...

மனக்காட்சியிலிருந்து விடுபடும் கமல் தாயிடம் கேட்கிறார்: "அந்த மூன்று பேரைக் கண்டுபிடித்துப் பழிவாங்க வேண்டும். அவ்வளவுதானே?"

தந்தையின் மரணம் அவ்வாறு நிகழவில்லை என சுமித்ரா விவரிக்க, கமல் சொல்கிறார் : "அப்படித்தான் இருக்க வேண்டும். எல்லாக் கதைகளும் இப்படித்தான் ஆரம்பமாகும்... ஆரம்பமாக வேண்டும்."

ஃபார்முலாவை இவ்வாறு கேலி செய்வதோடு கதையில் நகைச்சுவைக்கு அளித்திருக்கும் முக்கியத்துவத்தையும் குறிப்பாக உணர்த்தும் தொடக்கம்.

ஆனால், கமல் - குஷ்பு சந்திப்புக்குப் பின்னர் படம் அதே ஃபார்முலாவுக்கு அடிமைப்பட்டுப் போய் விடுகிறது!

கமலின் ஆற்றலை முழு அளவில் பரிமளிக்கச் செய்யும் வகையில் அமைந்துள்ள திரைக்கதை. குஷ்புவைச் சந்தித்து, படிப்படியாக அவர் மனத்தில் இடம்பிடித்துக் கல்யாணம் என்கிற கட்டத்தை நெருங்குவதற்குள் ஏகப்பட்ட ஆடல், பாடல், சிரிப்பலைகள். (இரண்டு பாடல்களை அவரே பாடியிருக்கிறார்.)

எதையும் லட்சியம் செய்யாத, வழக்கமான பணக்காரப் பெண் பாத்திரம் குஷ்புவுக்கு. திருப்புமுனை : "பொட்டு வைக்கத் தெரியாத, புடவை கட்டிக் கொள்ளத் தெரியாத நீயும் ஒரு பெண்ணா?" என்கிற கமலின் கேள்வி. அதைத் தொடர்ந்து நன்றாகச் சோபிக்கிறார்.

ஆகா மனோரமா. குஷ்புவை வளர்ப்பதற்கென்றே கன்னியாக வாழ்க்கையைக் கடத்தி விடும் அவர், தம்முடைய விரல்களைக் கமல் வர்ணிக்கும் ரசனையில் கிறங்கிப் போகும் கட்டத்தில், நம்மையும் கிறங்க வைக்கிறார்.

சம்பிரதாய வில்லன் நிழல்கள் ரவி. வெளியே நல்லவர். உள்ளுக்குள் கள்ளநோட்டுப் பேர்வழி. பணக்கார குஷ்புவைத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்கிற நோக்கம் அவர் வாழ்க்கையின் உந்து விசை. அந்தக் கட்டம் வரை போய், தாலி கட்டும் சமயத்தில் எல்லா வில்லன்களையும் போலக் கைதாகி விடுகிறார்.

கலகலவெனச் சிரிக்க வைக்கும் மசாலா.
கதையென்று மட்டும் எதையும் தேடி விடக் கூடாது.

- சி. ஆர். கே.



சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

# பார்க் டவுன் பெனிபிட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1985

223, தெற்கு தங்கசாலை வீதி (முதல் மாடி), சென்னை - 600 003. தொலைபேசி: 582676

உங்கள் வசதிக்கேற்றவாறு பயனடைய பற்பலச் சிறந்த திட்டங்களை அளிக்கும்

மேற்கண்ட நிறுவனத்தில் உறுப்பினராகுங்கள்.

பிக்சட் டிபாசிட் திட்டம்

| 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு* |
|---|---|---|---|---|---|---|
| 13% | 15% | 17% | 18% | 18.5 | 19% | 20% |

- தனயோகம் டிபாசிட் திட்டம் - வட்டி வீதம் 20%

குறைந்த அளவு டிபாசிட் ரூ.20,000/- காலம் 5 ஆண்டுகள். மாத வட்டிக்கான செக்குகள் முன் கூட்டியே கொடுக்கப்படும்

சேவிங்ஸ் கணக்குகள் மீது 9.5% வரை வட்டி

உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது. 90 மாதங்களில் 4 மடங்காகிறது.

## காமதேனு மாபெரும் திருப்பப் பெறும் திட்டம்

பிரதி மாதம் ரூ.100/- வீதம் தொடர்ந்து 15 வருடம் செலுத்துவீர்

5 ம் ஆண்டு முடிவில் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்

10 ம் ஆண்டு முடிவில் மீண்டும் ரூ.6000/- ஐத் திரும்பப் பெறுவீர்

15ம் ஆண்டு முடிவில் மிகப் பெருந்தொகையாக ரூ.50,000/- பெறுவீர்.

## பென்ஷனர் நலத்திட்டம்

முதியோருக்கென்றே அளிக்கப்படும் திட்டம்.

சேமிப்பு ரூ.13,000/- வட்டி வீதம் - 19% கால வரம்பு 12 மாதங்கள் மட்டுமே

முன்னதாகவே பெறும் காசோலைகள், விதவைகளும், உடல் ஊனமுற்றோர்களும்

மற்றும் கல்வி, சமய அறக்கட்டளைகளும்சேர்ந்து பயன் பெறலாம்

ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| பிரதி மாத டிபாசிட் | ரூ.25/-ம் அதன் பெருக்கமும் பெற்றுக் கொள்ளப்படும் மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
| ரூ. 25 | 330 | 715 | 1,180 | 1,800 | 2,510 | 3,350 | 4,370 |
| ரூ.100 | 1,310 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

## செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ

ரூ.7500/- ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,20,000/- பெறலாம்.

ரூ.9000/- ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ.1,44,000/- பெறலாம்.

கடன் வேண்டுமா? எங்களை அணுகுங்கள். நகைக்கடன் சவரனுக்கு ரூ.2400/- வட்டி விகிதம் ரூ.1.85 கடனுக்கு உச்சவரம்பு இல்லை. தருவதில் தாமதமில்லை,. R.D. கட்ட வேண்டியதில்லை...

*கௌரவ ஆலோசகர்:*

P.பாலசுப்ரமணியம், B.Sc.
முதன்மை அறங்காவலர்,
கந்த கோட்டம், சென்னை - 3.

இயக்குநர் குழுத் தலைவர்
R.விவேகாநந்தன் B.Com.

பங்குதாரர்களுக்கு மட்டும்.

Business Hours: Week Days 8.30 a.m. to 12.30 p.m. & 2.00 p.m. to 6.00 p.m. Sunday 8.30 a.m. to 12 noon.

Friday Weekly Holiday.

## அட அப்படியா!

●● மனம் என்பது என்ன? அதுதான் நரம்பு மண்டலமா? அல்லது விஷயங்களைப் புரிந்து கொண்டு, கிரஹித்து எடை போட்டு முடிவெடுக்கும் திறனா? மனம்தான் ஆத்மாவா? உயிரா? உயிர்ச்சக்தியா....? அல்லது மனம் இவையெல்லாவற்றின் ஒருங்கிணைப்பா....? அந்த ஒருங்கிணைப்புக்கும் அப்பாற்பட்ட ஒன்றா....?

யாருக்கும் விடை தெரியாது.

எதிர்காலத்தைப் பற்றி முன் கூட்டியே அறிந்து கொள்ளவும், இடப் பொருள்களைக் கட்டுப் படுத்தவும் மனத்துக்கு ஆற்றல் இருக்கிறது என்பது மட்டும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. சிலரால் மட்டுமே வெளிப் படுத்தப்படும் இந்த ஆற்றலை psychokinesis என்பர். (கிரேக்க மொழிச் சொல்லான இதற்கு, உடல் தொடர்பு இன்றி (அதாவது மன ஆற்றல் கொண்டு) பொருள் களின் நிலையை மாற்றும் திறன் என்று அர்த்தம்)

Psychokinesis பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளவர்கள் சிந்தனை ஓட்டத்தினால் பொருள்களும் சம்பவங்களும் பாதிக்கபடுமா என்று ஆராய்ந்து வருகிறார்கள்.




# அப்போலோ பயணத்தில் அமுக்கப்பட்ட விஷயம்!

●● சந்திர மண்டலத்தில் முதன் முதலாக அடியெடுத்து வைத்தவர் அப்போலோ - 11 குழுவைச் சேர்ந்த நீல் ஆர்ம்ஸ்ட்ராங்.

ஜுலை 20, 1969 அன்று இச் சம்பவம் நடந்த போது, அருகே ஒரு பெரிய பாறையின் விளிம்பில் இரண்டு U.F.O. க்களை நீல் ஆர்ம்ஸ்ட்ராங் கண்டதாகச் சொல்லப்படுகிறது.

(UFO - Unidentified Flying Object. அதாவது அடையாளம் தெரியாத பறக்கும் உபகரணம் - விண்வெளியில் வேறு கிரகங்களில் வாழக்கூடிய உயிரினங்கள் பயணிக்கவும் ஆராய்ச்சி செய்யவும் பயன்படுத்துவதாகக் கருதப்படும் வாகனங்கள்)

அப்போலோ - 11 பயணத்தின்போது அமெரிக்க தேசிய விண்வெளி ஆராய்ச்சிக் கழகத்தில் (NASA) பணியாற்றிய மாரிஸ் சாடெலேன் என்பவர், பின்னர் நாஸாவி லிருந்து வெளியேறிய தருணத்தில் இத் தகவலை வெளியிட்டார்.

நிலாவில் U.F.O. க்களைக் கண்ட ஆர்ம்ஸ்ட்ராங் அதைப் பற்றிய செய்தியை உடனே NASA வுக்கு அனுப்பியதாகவும் அப்போது ஆர்ம்ஸ்ட்ராங்குடன் சென்றிருந்த ஆல்ட்ரின் விண்கலத்திலிருந்தபடி அந்த U.F.O க்களைப் புகைப்படம் எடுத்ததாகவும் கூறுகிறார் சாடெலேன். ''ஆனால் NASA இத் தகவல்களைப் 'பாதுகாப்புக் காரணங்கள்' கருதி வெளியிடாமலேயே மூடி மறைத்து விட்டது'' எனவும் குற்றம் சாட்டுகிறார்.

ரஷ்ய விண்வெளி ஆராய்ச்சி நிபுணர் Sergei Boshich என்பவரும் 'அப்போலோ - 11 இன் திட்டங்களைக் குறித்த ரேடியோ அலைகள், சில U.F.O க்களால் கண்டறியப் பட்டன. அதனால் அவை அந்தப் பயணத்தை மறைந்திருந்து பார்த்தன என்று கூறுகிறார்.

தொகுப்பு : உதய் லால்

## வட்டமேஜை

# இதயத்தில் மணம் பரப்பிய சிறுகதை!

◆ ராஜினாமா செய்த சோலங்கியின் கடமையை வலியுறுத்தியதோடு, போஃபர்ஸ் விவகாரத்தில் லஞ்சம் பெற்ற நபர் குறித்த தகவல்களை வெளிக்கொணர வேண்டியது முழுப்பொறுப்பும் அரசுக்குரியது என ஆணித்தரமாக உரைத்த தலையங்கம் அருமை.

கொணவட்டம்,
கே.ஆர். தேவேந்திரன்.

◆ உண்மைகள் வெளியாவதால் பிரதமரின் - மைனா அரசின் கௌரவம் உயருமே தவிர, குறையாது. தலையங்கத்தில் தாங்கள் எழுதியிருந்த வாக்கியங்கள் நூற்றுக்கு நூறு உண்மை என்பதைப் பிரதமரும் காங்கிரஸாரும் உணர வேண்டும்.

திருச்சி - 2, ஆர்க். எழிலன்.

◆ ''தலைவர்களுக்கும் விடுமுறை'' குட்டிச் சிரிப்பை வரவழைத்தது.

மேட்டூர் அணை - 2, ஆர். கருணாகரன்.

◆ ''மனதில் ஒரு முள்'' பூமாப்பாதிச் சுகந்தாவின் இதயத்தை மட்டுமின்றி, எங்களது இதயத்தையும் வாசமாக்கியது.

வேலூர் - 4, வடமாலவன்.

◆ 'பிளட் பிரஷர்' பற்றிய கையேடு, இல்லத்து நூலகத்தில் வைத்துப் பாதுகாக்க வேண்டிய பொக்கிஷம்.

சென்னை - 23, வி. ராமநாதன்.



◆ பிளட் பிரஷர் பற்றிய இலவச இணைப்புக்கே மூன்று ரூபாய் சரியாகி விட்டது!

சாத்தூர், எம். செல்லையா.

◆ 'திருமதி எம்.எஸ். - திரு சதாசிவம் தம்பதி, தமிழ் மண்ணில் பிறக்க, தமிழ்த்தாய் என்ன தவம் செய்தாளோ!' என வியக்க வைக்கிறது, ''தங்கக் குரல்'' கட்டுரை.

தஞ்சாவூர் - 4, கே. காமாக்ஷி.

◆ இத்தனூண்டு இருந்துக்கிட்டு நாட்டு நடப்பை என்னமா நையாண்டி பண்ணுது இந்த ஜில்லு? பொன்விழா ஆண்டில் வருகைதந்த ஜில்லு ஜாலுவுக்கு எங்கள் வரவேற்பு.

திருவட்டார், மைரவி.

◆ 'கஸ்தூரி மஞ்சள்' பட விமர்சனத்தை மிகவும் வித்தியாசமான முறையில் தந்து எங்களை அசத்தி விட்டீரே!

மணலூர்ப்பேட்டை, கே. பாரதி.

◆ ஜெயராமனின், 'பாசம்' சிறுகதை படித்தேன். உண்மையிலேயே ஒரு யதார்த்தமான சிறுகதையைப் படித்த திருப்தி ஏற்பட்டது.

மாணாம்பதி, பா. பசுபதி.

◆ வித்தியாசமான முறையில், 'வீட்டிலேயே விடுமுறை'யைக் கழிக்கும் விதத்தைப் பற்றிப் பல்வேறு தரப்பினர் கூறிய கருத்துக்களுடன் 'கவர் ஸ்டோரி' மிகவும் சுவாரஸ்யமாக இருந்ததோடல்லாமல், பயனுள்ளதாகவும் இருந்தது.

திருப்பரங்குன்றம்,
டி.கே. சுப்பிரமணியன்.

◆ கல்கி 12.4.92 இதழின் 14 - ம் பக்கத்தில் வெளியான கே.எஸ். சுரேஷ் என்பவரின் ஜோக் ஏற்கெனவே என்னால் 15.12.91 - ம் தேதியிட்ட 'உங்கள் ஜூனியர்' இதழில் எழுதப்பட்டது. ஜெராக்ஸ் இணைத்திருக்கிறேன். அதை, மேற்படி சுரேஷ் ஆனந்தவிகடன் இதழுக்குக் காப்பியடித்து அனுப்பியதோடு மட்டுமின்றி, கல்கிக்கும் அனுப்பியிருக்கிறார். (பார்க்க ஆ.வி. 5.4.92 - 37 - ம் பக்கம்) இவரைக் 'கல்கி' இனிமேல் ஆதரிக்காது என்று நம்புகிறேன்.

கும்பகோணம் - 1, ஆர்.ஜே. அனுபமா.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர் : சீதா ரவி.
முகவரி : ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை - 600 032. தொலைபேசி : ஆசிரியர் குழு அலுவலகம் : 2344145; சர்க்குலேஷன் மானேஜர் : 2344190; விளம்பரம் - சந்தா: 2344157; டைரக்டர்: 2341543.
ஆண்டுச் சந்தா - உள்நாடு: ரூ. 156/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு: ரூ. 78/-; வெளிநாடு: கப்பல் தபால்: ரூ. 200/- விமானத் தபால்: ரூ. 525/-.




அறிமுகப்படுத்துகிறோம்
புதிய ஸெரிலாக்!

எப்போதையும் விட
இப்போது சிறந்தது!!

இப்போது புதிய Z-சீலன் முறைப்படி ஸெரிலாக்
தயாரிக்கப்படுவதால், முன்பைவிட எளிதில் ஜீரணமாகிறது!

New IMPROVED
Nestlé
Cerelac
உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக்.

கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப் பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு
தங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்.

